

# திருநெல்லை

ஆன்மீகத் திங்களிதழ்

குரோதி - வைகாசி - 2025 - ஜுன் | இணைய வழி - மலர் - 2 - இதழ் - 10

## ஞானாக்ஷி
## ஸ்ரீ ராஜராஜேஸ்வரி அம்பாள்

கைலாஷ் ஆஸ்ரமம் பெங்களூரு

# திருநெல்லை

இணைய வழி ஆன்மீகத் திங்களிதழ்

குரோதி – வைகாசி

2025– ஜூன்

இணையவழி மலர் 2 – இதழ் 10

(தனிச் சுற்றுக்கு மட்டும்)

சிறப்பாசிரியர்

பொற்கிழிக் கவிஞர்

சொ.சொ.மீ. சுந்தரம்

ஆலோசகர்

தமிழாகரர் தெ. முருகசாமி

ஆசிரியர் குழு

வெளியிடுபவர்

சீர் வளர் சீர்

நாராயண ஞான தேசிக சுவாமிகள்

கோவிலூர் மடாலயம்

கோவிலூர் 630 307

மானகிரி (அஞ்சல்)

(வழி) காரைக்குடி

சிவகங்கை மாவட்டம்

 04565–236846

 94433 37011

இணைய அச்சாக்கம்

தீபா ராஜேஸ்வரி

கோவிலூர்


## பொருளடக்கம்

பக்கம்

# ஆசியுரை



சீர் வளர் சீர்

**நாராயண ஞான தேசிக சுவாமிகள்**

கோவிலூர் ஆதினகர்த்தர்

அனைவருக்கும் நமது நல்லாசிகள். இம்மாதத்தில் பல முக்கியமான நிகழ்வுகள் நடைபெற்றுள்ளன. அவற்றின் வழியாகப் பல முன்னேற்றச் செயல்பாடுகள், வழிகள் நமக்கும் இந்தச் சமுதாயத்திற்கும் கிடைத்தது என்பதில் மகிழ்ச்சி

## பெங்களூருவில் நடைபெற்ற சாதுக்கள் மாநாடு

பாரத நாட்டின் பழம்பெருமையைக் காக்கவும், நிகழ்காலப் பண்பாட்டுச் சிக்கல்களைத் தீர்க்கவும் மடாதிபதிகள், ஞானிகள், அறிஞர்கள், போன்றோர் சந்திக்கும் மாநாடு பெங்களூருவில் 16 62025 அன்று நடைபெற்றது. இதில் ஆயிரத்திற்கும் மேற்பட்ட மடாதிபதிகள் கலந்து கொண்டனர். இம்மாநாட்டில் கலந்து கொள்ளவும் உரையாற்றவும் நமக்கு அழைப்பு வந்தது. இதில் நாம் கலந்து கொண்டு உரையாற்றினோம். ஒரு காலப் பூஜை கூட நடைபெறாத பல கோவில்கள் தமிழகத்தில் உள்ள நிலையை எடுத்துரைத்து ஒரு காலப் பூசையாவது நடைபெறுவதற்கான ஆலோசனைகளை வழங்கினோம். மேலும் மதமாற்றம் நடைபெறுவதைத் தடுப்பதற்காக எடுக்க வேண்டிய முயற்சிகள் குறித்தும் எடுத்துரைத்தோம்.

பெங்களூரு நகரில் நடைபெற்ற இந்த மாநாட்டில் கலந்து கொண்டதன் வாயிலாகப் பல துறவியர்களை ஒரே நேரத்தில் சந்திக்க முடிந்தது. தமிழகத்தின் மடாதிபதிகள் அனைவரையும் ஒரே நேரத்தில்



சந்திக்கும் வாய்ப்பு அமைந்து அவர்களோடு கலந்துரையாட முடிந்தது. இந்திய அளவில் உள்ள மடாதிபதிகளையும் சந்திக்க முடிந்தது. டில்லி போன்ற உலக முக்கியத்துவம் வாய்ந்த நகரங்களில் அமைந்துள்ள சுவாமி நாராயண் அக்ஷரதம் என்ற அமைப்பின் தலைவர் ஸ்ரீ ஸ்ரீ பத்ரேஷ்தாஸ் சுவாமிகள் அவர்களுடன் தொடர்பு ஏற்பட்டு, பல முன்னேற்றமான நடவடிக்கைகளுக்கான முயற்சிகள் தொடங்கப்பட்டன. மிகப் பெரிய சந்திப்பான இம்மாநாட்டின் வழியாக இந்திய மடாதிபதிகளுக்குக் கோவிலூர் மடம் பற்றிய அறிமுகமும், கோவிலூர் மடத்தின் செயல்பாடுகளும் அறிவிக்கப்பெற்றது. இம்மாநாட்டைத் தொடர்ந்து இன்னும் பல சந்திப்புகள், பல முன்னேற்றச் செயல்பாடுகள் நடைபெற உள்ளன. இதனை நடத்திய பாரதீய சந்த மகா பரிஷத் என்ற அமைப்பு இந்து தர்மத்தின் காப்பு முயற்சிகளை மேற்கொண்டு வருகிறது. இவ்வமைப்பின் நோக்கங்கள் வெற்றி பெற நமது ஆசீர்வாதம்.



**மேலே காணும் நிகழ்வின் வீடியோ பதிவைக்காண இங்கே சொடுக்கவும்**

## கோவிலூரில் காசிக் காட்சி



காசி தரிசனம் கோடி புண்ணியம். காசியின் முக்கியமான இடங்கள், காசி விசுவநாதரின் இரண்டு காலப் பூசை, காலபைரவர் ஆலயக் காட்சி, கங்கா ஆர்த்தி போன்றவற்றை அருகிலிருந்து நேரில் பார்க்கின்ற அனுபவத்தைத் தரும் வெர்டியுவல் ரியாலிட்டி **(Virtual reality)** முறையிலான காட்சி வடிவம் கோவிலூரில் உள்ள தென் சபாநாயகர் கோவிலில் தற்போது ஏற்படுத்தப்பெற்றுள்ளது. ஆறுமாத காலக் கடின உழைப்பின் வழியாக இது கோவிலூருக்குத் தற்போது வந்துள்ளது. காசி விசுவநாதர் திருக்கோவிலில் மட்டுமே காணக் கூடியதாக இருந்த இந்த மெய் நிகர் காட்சி தற்போது காசி விசுவநாதர் திருக்கோவிலின் அனுமதியுடன் கோவிலூரில் காண்பதற்கான வசதி கிடைத்துள்ளது.

இதற்கான மூன்று சிறப்புக் காட்சிக் கருவிகள் கண்களில் அணிந்துப் பார்க்கும் வண்ணம் கோவிலூரில் தென் சபாநாயகர் கோவிலில் வைக்கப்பெற்றுள்ளது. இதனைக் கண்களில் அணிந்துகொண்டுப் பார்த்தால் காசியின் தெய்வீகக் காட்சி கண்முன்னே நடக்கும். நம் கரங்கள் நம்மை அறியாமலே வணங்கும்.



மேனாள் நீதி அரசர் டத்தோ ஸ்ரீ முனைவர் மெ.சொக்கலிங்கம் அவர்கள் தலைமையில், கலைமாமணி முனைவர் சரசுவதி இராமநாதன் அவர்கள் துவக்கி வைத்தார்

**மேலே காணும் நிகழ்வின் வீடியோ பதிவைக்காண இங்கே சொடுக்கவும்**

காதுகளுக்குக் காசியில் நடைபெறும் காட்சியின் பின்னணி இசை கேட்கும். காசியில் இருப்பதுபோன்றே இக்காட்சி முக்தி தரும்.

இவ்வரிய அமைப்பினை மக்களும் பார்க்கும் வண்ணம் 19.6.2025 அன்று கோவிலூரில் தென் சபாநாயகர் திருக்கோவிலில் நீதியரசர் டத்தோஸ்ரீ முனைவர் இராசகோபுரம் மெ.சொக்கலிங்கம் அவர்களும், இசைப் பேராசிரியர் சரசுவதி இராமநாதன் அவர்களும் கண்டு கேட்டுத் தொடங்கி வைத்தனர். இதன்பின் நிகழ்ந்த விழாவில் நாமும் இந்நிகழ்வின் சிறப்புப் பற்றிக் கூறினோம். நீதியரசரும், இசைப் பேராசிரியரும் தாங்கள் இக்காட்சி வழி பெற்ற அனுபவத்தை எடுத்துரைத்தனர். அதுமட்டும் இல்லாமல் நீதியரசர் மெ. சொக்கலிங்கம் அவர்கள் முதியோர் இல்லங்களில் இக்காட்சியைப் பார்க்கும் பொழுது அவர்களுக்கான கட்டணத்தைத் தான் அளிப்பதாகக் கூறினார். இதன் வழியாகத் தற்போது பல முதியோர் இல்லங்களில் இக்காட்சியைக் காணமுடியும். 28.6.2025 அன்று அரிமளத்தில் உள்ள முதியோர் இல்லத்தில் 91 முதியோர்கள் காசிக் காட்சியைக் கண்டனர். பள்ளத்தூரில் உள்ள முதியோர் இல்லத்தில் உள்ள




## கோவிலூர் மடாலயம் அரிமளம் முதியோர் இல்லத்தில் காசி தரிசனக்காட்சி வழங்கிய பதிவு

அன்பர்கள் இதனைக் காண திருமதி சரசுவதி இராமநாதன் அவர்கள் அதற்குரிய கட்டணத்தைத் தாம் அளிப்பதாகக் கூறினார். மேலும் தேவகோட்டை, கண்டவராயன் பட்டி போன்ற ஊர்களில் உள்ள முதியோர் இல்லங்களிலும் இக்காட்சி காண்பிக்கப்பட ஏற்பாடாகி வருகிறது. இக்காசிக் காட்சியைக் காண விரும்பினால் திரு.முத்தப்பன் அவர்களைத் தொடர்பு கொள்ள வேண்டுகிறோம். அவரின் தொலைபேசி எண் 9789336720.

இந்தத் தொலைபேசி எண்ணில் தொடர்பு கொண்டு நிகழ்ச்சிக்கான நாள், ஏற்பாடு போன்றவை குறித்து முன்பதிவு பெற்று இக்காட்சியைக் கண்டு காசி அனுபவத்தைப் பெற வேண்டுகிறோம்.

இக்காட்சியை ஒருமுறை

காணச் செலுத்த வேண்டிய கட்டணம் ரூ 150 மட்டும். இதில் ஒரு பகுதி காசி திருக்கோவிலுக்கும், மீதி இதைத் தயாரித்தவர்களுக்கும் செல்லும். இதன் வழியாகக் காசிக் காட்சியையும் காணமுடிகிறது. காசி விசுவநாதருக்குக் காணிக்கையையும் நம்மால் வழங்க முடிகிறது. முதியோர் இல்லங்களில் உள்ளவர்கள் காண்பதற்கான தொகையை நீதியரசர் திரு சொக்கலிங்கம் அவர்கள் முழுமையாகப் பங்களிக்கிறார்கள். முதியோர் இல்ல நிர்வாகிகளும் திரு முத்தப்பன் அவர்களைத் தொடர்பு கொள்ள வேண்டியது.

தென் சபாநாயகர் திருக்கோவிலில் நடைபெறும் இக்காட்சியை அனைவரும் கண்டு மகிழக் கேட்டுக்கொள்கிறோம். குறிப்பாக வயதானவர்கள் காசிக்குச் சென்றுவந்த அனுபவத்தை இந்த மெய்நிகர் காட்சி அளிக்கும். காசியைக் காண்போம். காசிக்குக் காணிக்கை செலுத்துவோம். புண்ணியம் பெறுவோம்.

## நகரத்தாரின் பண்பாட்டுப் பதிவுகள் நூல் வெளியீடு

பேராசிரியை வள்ளி சொக்கலிங்கம் அவர்கள் எழுதிய நகரத்தாரின் பண்பாட்டுப் பதிவுகள் என்ற தலைப்பிலான கட்டுரை நூல் 24/06/2025 அன்று சென்னையில் உள்ள சோனா டவர்ஸ் என்னும் இடத்தில் வெளியிடப்பெற்றது. இந்நூல் நகரத்தார்தம் வரலாறு, பண்பாடு, அறங்கள் போன்றன பற்றிய பல தகவல்கள் அடங்கிய நூலாகும். இந்நூலின் அச்சு வடிவம், இணைய வடிவம் இரண்டும் இதே நாளில் வெளியிடப்பெற்றது. இவ்வெளியீட்டு விழாவிற்கு வருகை தந்த அனைவருக்கும் நூல் பிரதி வழங்கப்பெற்றது. மேலும் இணையத்தின் வழியாக இந்நூலை, நூல் வெளியிட்ட இருபத்துநான்கு மணி நேரத்திற்கு உள்ளாக 1200 பேருக்கு மேலும், இப்போது வரை 2000 பேர்களுக்கு மேலும் பதிவிறக்கம் செய்து வாசித்துள்ளனர் என்பது மிக்க மகிழ்ச்சியான செய்தி. தமிழ் நூல் ஒன்று 2ஆயிரம் வாசகர்களுக்கு உடனே சென்று சேர்ந்துப் பயனளிப்பது என்பது இதுவரை நடக்காத ஒன்று. வாட்ஸ் அப் குழுக்கள் வழியாக இந்நூலின் இணைய வடிவம் பல அன்பர்களால் பகிரப்பெற்றுள்ளது. இனி இதுபோன்ற வெளியீடுகள் வரவேண்டும். மக்களை உடன் சென்றடைய வேண்டும் என்பது நமது விருப்பம். அது தொடர்ந்து நிறைவேறும். மிகக் குறிப்பிடத்தக்க சுமார் 60 பேர் மட்டுமே அழைக்கப் பட்ட இந்த இவ்விழாவில், முருகப்பா குழுமத் தலைவர் திரு எம்.வி.



சுப்பையா அவர்களும், தனவணிகன் இதழ் ஆசிரியர் திரு வி.என். சிடி வள்ளியப்பன் அவர்களும், முனைவர் மு.பழனியப்பன் அவர்களும், நூலாசிரியர் முனைவர் வள்ளி சொக்கலிங்கம் அவர்களும் கலந்து கொண்டனர். இவ்விழாவிற்காக உருவாக்கப் பட்ட வாட்ஸ் அப் குழு வாயிலாக இந்நூலின் இணையப் பிரதி பலருக்கும் சென்று சேர்ந்தது. இவ்விழாவிற்குப் பெரிதும் உதவிய பொறியாளர் இன்னோவேடிவ் அண்ணமாலை அவர்களுக்கும் நடத்த இடம் கொடுத்து உதவிய திரு இ.எம்.சி.பழனியப்பன் அவர்களுக்கும் இணைப்புரையைச் சிறப்பாக நிகழ்த்திய திருமதி. தெய்வானை அவர்களுக்கும் நமது சிறப்பான பாராட்டுதல்கள்.

## குழந்தைகளைப் பக்திச் சூழலில் வளர்ப்போம்

சில நாட்களுக்கு முன்னதாக மலேசியாவில் உள்ள மகளிர் இறை அருள் குழு என்ற அமைப்பு நடத்திய காணொளி வழியான நிகழ்ச்சியில் கலந்து கொள்ளும் வாய்ப்பு கிடைத்தது. அப்போது மலேசியா, சிங்கப்பூரில் தேவாரம் திருவாசகம் போன்ற தெய்வப் பனுவல்களைச் சிறுவர் சிறுமியர்க்குக் கற்றுத் தரும் நல்ல முயற்சி நடைபெற்றுவருகிறது. இதன் வழியாகச் சிறுவர் சிறுமியர்கள் நல்வாழ்க்கை பெறுகிறார்கள். இதனோடு இல்லாமல் பெற்றோரும்



மகளிர் இறையருள் குழுவினர் இணைய வழி நடத்திய நான்காம் ஆண்டு விழாவில்"இளமையில் பக்தி" எனும் தலைப்பில் "கோவிலூர் ஆதினம் சீர் வளர் சீர் நாராயண ஞான தேசிக சுவாமிகள்" குழந்தைகளுக்கு ஆற்றிய ஆசியுரை

அவர்களுடன் இணைந்து தெய்வீகச் செயல்பாடுகளில் ஈடுபடுதல் வேண்டும். மாண்டிசோரி அம்மையாரின் கல்வித்திட்டத்தில் அவர் குறிப்பிடுவது ஒன்று முதல் ஆறு வயது வரை உள்ள குழந்தைகள் தாம் வாழும் வாழ்க்கைச் சூழலை அப்படியே மனதிற்குப் பதிவு செய்துவிடுகிறார்கள். இந்தப் பதிவு மிக மிக முக்கியமானது என்கிறார். எனவே இளம் குழந்தைகளை நல்ல சூழலில் வளர்க்கவேண்டும். பெற்றோர்கள் இந்த வயதிலேயே பக்தி அடிப்படையிலான வாழ்க்கைச் சூழலை உருவாக்க வேண்டும். குழந்தைகளுக்கு யு டியுபில் தேவையற்ற பாடல்களைக் காட்டுவதை மாற்றி பக்தி அனுபவத்திற்குக் கொண்டு வரவேண்டும். நமது தாலாட்டு மிக அருமையான குழந்தைகளுக்கான இனிய வாழ்க்கைச் சூழல். மீண்டும் தாலாட்டு நம் இல்லங்களில் ஒலிக்கவேண்டும். பக்திச் சூழல் வளரவேண்டும். இந்த எண்ணங்களை நாம் இந்நிகழ்வில் பகிர்ந்து கொண்டோம்.

கோவிலூரில் உள்ள ஆண்டவர் மெட்ரிக் பள்ளியில் தற்போது பரதநாட்டியம், தேவார இசை, தமிழிசை போன்ற கற்றுத் தருவதற்காகத் தனிச் சிறப்பு வகுப்புகள் எவ்விதக் கட்டணமின்றித் தொடங்கப் பெற்றுள்ளன. அதற்கான ஆசிரியர்களும் நியமிக்கப் பெற்றுள்ளனர்.





## மாணிக்கவாசகர் குருபூசை

29/6/2025 அன்று நமது கோவிலூர் தென் சபாநாயகர் திருக்கோவிலில் மாணிக்கவாசகர் குருபூசை சிறப்பாக நடைபெற்றது. இந்நாளில் காரைக்குடி திருநாவுக்கரசர் இறைப்பணி மன்றத்தின் சார்பில் திருவாசக முற்றோதல் நிகழ்ச்சி நடைபெற்றது. இம்முற்றோதலில் கலந்து கொண்டோர் காசி மெய்நிகர் காட்சியையும் கண்டு ஆனந்தம் அடைந்தனர்.



## அறிஞர் சொ.சொ.மீ அவர்களின் பெரியபுராண உரை

30/6/2025 முதல் சென்னையில் உள்ள ஆவிச்சி கல்லூரி அரங்கில் அறிஞர் சொ. சொ. மீ சுந்தரம் அவர்களின் பெரியபுராணத் தொடர் சொற்பொழிவு தொடங்கி உள்ளது. நாமும் அதில் கலந்து கலந்து கொண்டு துவக்க உரை நிகழ்த்தினோம். தெய்வச் செந்நூல் பெரியபுராண விளக்கம் தேனினும் இனிய சொ.சொ.மீ சுந்தரம் அவர்களின் சொற்களால் கேட்பது என்பது மிகச் சிறந்த வாழ்வியல் அனுபவம்.

எல்லோருக்கும் நமது நல்லாசிகள்.



சம்பூர்ணானந்த் சம்ஸ்கிருத பல்கலைக்கழகத்தின் துணைவேந்தர் டாக்டர் பி.எல்.சர்மா அவர்கள், கோவிலூர் மடாதிபதி சீர் வளர் சீர் நாராயண ஞான தேசிக சுவாமிகளை கவுரவிக்கும் புகைப்படம்







காசி விஸ்வநாதர் கோவில் தலைமை செயல் அதிகாரி திரு விஸ்வ பூசன் மிஸ்ரா அவர்களும், கோவிலூர் சுவாமிகளும் அருள்மிகு காசி விஸ்வநாதருக்கு கங்கை தீர்த்த அபிஷேகம் செய்யும் காட்சி

## கோவிலூர் மரபு வேதாந்த நூல்கள் அறிமுகம் – 3

# திருவேங்கடநாதர் இயற்றிய கீதா சாரத் தாலாட்டு



- முனைவர் மு.பழனியப்பன்
தமிழ்த்துறைத் தலைவர்,
அரசு கலை மற்றும் அறிவியல் கல்லூரி,
திருவாடானை

கோவிலூர் மரபு வேதாந்த நூல்களில் எளிமையானதும் இனிமையானதும் கீதாசாரத் தாலாட்டு ஆகும். இதனை இயற்றியவர் திருவாமத்தூரைச் சார்ந்த திருவேங்கடநாதர் ஆவார். இவரின் மகளுக்கு மகப்பேறு வாய்க்காத நிலையில் இவர் கண்ணன் உருவ பொம்மையைத் தன் மகளிடம் அளித்து அதனைப் பாராட்டிச் சீராட்டி வளர்க்கக் கூறினார். மேலும் அக்கண்ணனுக்காக ஒரு தாலட்டைப் பாடினார். அத்தாலாட்டே கீதா சாரத் தாலாட்டு எனப்பட்டது. இதனுள் பகவத் கீதையின் ஞான யோக தத்துவக் கருத்துகள் உரையாடல் முறையில், கேள்வி பதில் முறையில் விளக்கப்பெற்றுள்ளது. அர்ச்சுணன் கேள்வி கேட்பவனாகவும், பரம்பொருளான கிருஷ்ண பரமாத்மா வேதாந்த அடிப்படையில் அரச்சுணனின் கேள்விகளுக்குப் பதில் அளிப்பதாகவும் இந்நூல் அமைக்கப்பெற்றுள்ளது. இத்தாலாட்டைப் பாடியும் கண்ணன் பொம்மையைச் சீராட்டி வளர்த்தும் ஆனந்தம் பெற்ற திருவேங்கடநாதரின் மகள் பின்னாளில் மகப்பேறு வாய்க்கப்பெற்றாள் என்பது இந்நூலால் விளைந்த பயனும் பெருமையும் ஆகும்.

திருத்தேரில் சாரதியாய் இருந்து அருச்சுணனுக்கு மெய்ஞானம்

ஏற்பட உரை செய்த கண்ணபிரான் வணங்குதற்குரியவர் ஆவார். அர்ச்சுணன் போர்க்களத்தில் தனக்கு எதிரே நிற்கும் தன் உறவினர்கள் சுற்றத்தார்கள் ஆகியோரைப் பார்த்துக் கலங்கி அவர்களுக்கு நாசம் வருமே என்று எண்ணி போர் செய்யாது தயங்குகிறான். அவனைப் பார்த்த பரமாத்மா கிருஷ்ணர் ''சாத்திரங்களை நன்கு கற்ற ஞானிகள் பிறப்பு, இறப்பு ஆகியவற்றை எண்ணிக் கலங்கமாட்டார்கள். நீயும் கலங்காதே. ஞானியாக மெய்ஞ்ஞானம் அறிந்து கொள் '' என்று உரைப்பதாக இக்கீதை தொடங்குகிறது.

**நித்தியம் ஆகிய ஆன்மா நின் சொரூபம்**

''பிறப்பு இறப்பு என்பது எந்த ஆன்மாவிற்கும் இல்லை. இவ்வுலகில் உயிர்கள் முன் செய்த வினைப்பயன் காரணமாகத் தனக்கான உடல் வடிவைப் பெற்றுப் பிறக்கின்றன. உடல்தான் தோன்றுகிறது மறைகிறது. என்றைக்கும் ஆன்மா அழியாதது. ஆன்மாவே உன் வடிவம் '' என்று ஆன்மாவின் நித்திய தன்மை குறித்தும் உயிர்களின் வடிவம் குறித்தும் கண்ணன் உரைக்கிறார்.

'' இத்தரையில் பிறந்து இறப்பது எடுத்த உடற்கு, அடுத்த பொறி

நித்தியம் ஆகிய ஆன்மா நின் சொரூபம் என்றவரோ'' (8)

என்று ஆன்மாவின் இயல்பினை எடுத்துரைக்கிறது கீதா சாரத் தாலாட்டு.

**ஆன்மாவைக் காணமுடியவில்லையே**

உடல் வடிவத்தைக் கண்களால் காணமுடிவதைப் போல ஆன்மாவின் வடிவத்தைக் கண்களால் காணமுடிவதில்லையே என்று அர்ச்சுணன் தொடர்ந்து கேள்வி கேட்கிறான்.

இதற்கு அமைதியாக விடைதருகிறார் கிருஷ்ண பரமாத்மா. உன்னால் உடல், உயிர் போன்றவற்றை உணரமுடிகின்றது. இவற்றால் உணரப்பட முடியாத நிலையில் இருப்பதுதான் ஆன்மா. அது அறிவு மயமானது. உயிர்கள் செய்யும் நன்மை தீமைகளால் உடலே பலன்களை அனுபவிக்கிறது. ஆன்மாவிற்குத் துன்பம் இன்பம், பாவம் புண்ணியம் எதுவும் கிடையாது. மனமே இன்பத்தையும் துன்பத்தையும் அடைகிறது. மனதின் இன்ப துன்பங்களுக்கு ஏற்ப உடலும் இன்ப துன்பங்களை ஏற்கிறது. மனம் என்பது வேறு. ஆன்மா என்பது வேறு. இருப்பினும் மனத்தின் தன்மை ஆன்மாவையும் ஓரளவிற்குப் பாதிப்படையச் செய்கின்றது. நெருப்பின் மீது வைக்கப்பட்ட பாத்திரம் சூடாவது

கீதா சாரத் தாலாட்டு

8-1

1980

வெளியீடு:
கோவிலூர் ஆதீனம்

# நூலின் இணைய இணைப்பு

நேரடித் தொடர்பு. பாத்திரத்தில் உள்ள நீர் நெருப்புடன் நேரடித் தொடர்பில் இல்லை. ஆனாலும் பாத்திரத்தின் சூட்டினை ஏற்று அது வெப்பம் அடைய ஆரம்பிக்கிறது. அதுபோன்று மனதின் இன்ப துன்பங்கள் மனதுடன் ஓரளவு தொடர்புடைய ஆன்மாவிற்கும் ஆகின்றது.

உடல், உயிர் போன்றவற்றையே, தன் வடிவம் என்று எண்ணுகின்ற அறியாமையே ''நான்'' என்ற நிலையாகும். ''நான்'', ''எனது' என்ற பற்றினை நீக்கினால் அதுவே வீடுபோறு ஆகும். நான் என்ற உணர்வு எப்போது நீங்கும் என்று அர்ச்சுணன் கேட்ட கேள்விக்குப் பதில் தருகிறார் பரமாத்மா.

கேள்வியாலும், மனனத்தாலும், தொடர்ந்து செய்யும் சாதனைகளாலும், பிரமத்தை அறியும் அனுபவம் உண்டாகும். கேள்வியால் பிரம்மத்தை அறிதல் என்பது குரு வழியாக அவரின் உபதேசத்தால் பிரம்மத்தை அறிதல் ஆகும். அவ்வாறு கேட்டதை மீண்டும் மீண்டும் மனதிற்குக் கொண்டுவருவது மனனம் ஆகும். தொடர்ந்து செய்யும் சாதனை என்பது அஹம் பிரம்மம் என்று சதாசர்வகாலமும் சிந்தித்தல் ஆகும். இவற்றால் '' நான்'' என்ற நிலை உயிர்களுக்கு நீங்கும் என்கிறார் பரமாத்மா.

பிறவிகள் அனைத்தும் தான் பெற்றுள்ள உடலையே ''நான் '' என்று எண்ணும். ''தான்'' என்பது நீங்கியவுடன் ஆன்ம சொரூபம் வெளிப்பட்டு வீடுபேறு கிட்டும்.

இவ்வாறு ஆன்மாவின் இயல்புகள் பற்றியும் ,அது வீடுபேறு பெற அதனிடம் உள்ள தான் என்ற இயல்பு நீங்க வேண்டும் என்றும் கீதா சாரத் தாலாட்டின் முன்பகுதி பல விளக்கங்களை அளிக்கின்றது. ஆன்மாவை அறிவோம். தான் என்பதை அகற்றுவோம். வீடுபேற்றிற்கான வழியைக் கண்டறிந்து அதனை அடைவோம்.



## சமய எழுச்சியால் சமூக மறுமலர்ச்சி காட்டிய

# அப்பர்

பகுதி – 15

## அப்பர் வலியுறுத்திய சிந்தையில் தெளிவு





**திருமதி மு. சுப்புலட்சுமி,**
வரலாற்றாய்வர்
ஆசிரியர்: www.glorioustamils.com, www.attraithingal.com,
வலையொலி/ podcast
அற்றைத்திங்கள்...
வலையொலியில் தமிழொலி

பத்திமை வளர்க்கும் நெறியாளருக்குரிய கட்டுப்பாடுகளைத் தகர்த்தெறிந்து, ஒரு சமூக ஆர்வலராகவும் வலம்வந்த நாவுக்கரசர், சிந்தையில் தெளிவைப் பத்திமைக்குரிய இன்றியமையாத் தகுதிகளுள் ஒன்றென்றார்.

'ஆலைக் கரும்பின் தெளிவே போற்றி' என்றும் 'தேனத்தை வார்த்த தெளிவே போற்றி' என்றும் அப்பர் இறைவனைப்



## யானையை அழித்தவர்

போற்றியது இனிமைக்காக மட்டுமா? இனிமைக்காகவெனில், 'இனியானே போற்றி' என்றல்லவா பாடியிருப்பார்? 'கட்டிப்பட்ட கரும்பினும் இனியன் இடைமருதன்' என்று சொன்னவர், இங்கு தெளிவென்ற சொல்லை ஏன் பயன்படுத்தினார்?

கரும்பின் சாறிலும் தேனிலும் கசடுகளுண்டு. திரவங்களின் மாசுகளை வடிகட்டியபின் கிடைக்கும் இறுதிப்பொருளே தெளிவு. கசடுகள் நீங்கின் தெளிவு பிறக்கும் என்பதைத்தான் 'கற்க கசடற' என்று வள்ளுவரும் உரைத்தார். மாசில்லாத் திரவம், கசடில்லாக் கல்வி, குழப்பமில்லா எண்ணம், கலக்கமில்லாச் செயல்பாடு இவற்றால் வெளிப்படுவதே தெளிவு. அறிவையும் அறத்தையும் சமூகநோக்கில் வலியுறுத்திய அப்பர், இறைவனெனும் சோதியை நுட்பமாக ஆய்ந்துணரும் போக்கில், தெளிவின் தேவையைப் பலவாறாக உணர்த்த முயன்றார். அதன் வெளிப்பாடே, கரும்பின் தெளிவும் தேனின் தெளிவும்.

சிந்தை என்பதற்கு உள்ளம், அறிவு, எண்ணம் என்று பலவாறாகப் பொருள் கொள்வர். எனினும், உள்ளத் தெளிவென்றும் நெஞ்சத் தெளிவென்றும் அப்பர் தெளிவாக இணைத்துப் பேசுவதால், சிந்தையை நெகிழ்ந்துருகும் உள்ளமென்றே கொள்ளத் தோன்றுகிறது. இந்த நுட்ப வேறுபாட்டிலும் நிலைபெற்று நிற்கும் ஒன்று தெளிவு.

### சங்கத் தமிழர் தெளிவு

சங்கத்தின் மரபுசார் நீட்சியாக நெஞ்சொடு கிளத்தலையும் அறச்சிந்தனைகளையும் பத்திமையில் சுவைபடவும் நெறிபடவும் உவந்தளித்தவர் நாவுக்கரசர். அவ்வகையில், அப்பர் போற்றும் சிந்தையில் தெளிவைச்

சங்க இலக்கியம் எங்ஙனம் காட்டுகிறது?

ஐயாதிச் சிறுவெண்தேரையார் என்ற புலவரின் புறநானூற்றுப் பாடலிது "கடலால் சூழப்பட்ட இம்மாபெரும் உலகில், பிற மன்னர்கள் வெற்றி கொள்ள இலையளவு இடம்கூடத் தராத அரசர்களும் இறுதியில் மாய்ந்து போயினர்; இங்கு அழியாது உடம்பொடு நின்ற உயிரேதும் இல்லைஞ் கள்ளி ஏய்ந்த முள்ளியம் புறங்காட்டுக்கு அனைவரும் போகத்தான் வேண்டும்," என்று மன்னரை அறிவுறுத்தியதோடு நிற்கவில்லை புலவர்.

இன்னா வைகல் வாரா முன்னே
செய்ந்நீ முன்னிய வினையே
முந்நீர் வரைப்பு அகம் முழுதுடன் துறந்தே (புறம் 363)

"அத்தகு வருத்தமிகு நாள் வரும்முன்னர், கவர்ந்திழுக்கும் உலக விருப்புகளைத் துறந்து எண்ணிய செயல்களை முடித்துக்கொள்," என்றும் வற்புறுத்தினார். செம்மாந்து நின்று உயரப் பறக்கும் அரசரைத் தரையில் காலூன்றி இயல்பு நிலைக்கு அழைத்துவரும் திறனே சங்கம் வளர்த்த தமிழ்ப் புலவர்களின் சிந்தைத்தெளிவு.

'யாதும் ஊரே யாவரும் கேளிர்' என்று ஓங்கியொலித்த கணியன் பூங்குன்றனாரின் தெளிவு இன்றும் உலகம் போற்றும் ஒன்று மின்னலுடன் வானில் குளிர்ந்த மழை பெய்கையில், ஒலியோடும் வலிமையோடும் கல்லிலும் மலையிலும் மோதிச் செல்லும் பேராற்றின் நீரோட்டத்தில் ஆடிச்செல்லும் தெப்பத்தைப் போன்றதே நம் வாழ்க்கை என்று திறன் படைத்தவர்களின் அறிவுரைகள் மூலம் தெளிவு பெற்றோம் ('திறவோர் காட்சியின் தெளிந்தனம் ஆகலின்..'). ஆதலால், 'மாட்சியின் பெரியோரை வியத்தலும் இலமே, சிறியோரை இகழ்தல் அதனினும் இலமே' (புறம் 192), என்பது வியத்தகு தெளிவன்றோ?

நரிவெரூஉத் தலையாரின் பாடல் கூற்றுவனைக் கொணர்கிறது

கணிச்சிக் கூர்ம் படைக் கடுந்திறல் ஒருவன்
பிணிக்கும் காலை இரங்குவிர் மாதோ
நல்லது செய்தல் ஆற்றீர் ஆயினும்
அல்லது செய்தல் ஓம்புமின் (புறம் 195)

கூற்றுவன் பாசக்கயிற்றால் பிணிக்கும்காலை, நல்லது செய்யத் தவறினாலும், அல்லது செய்வதைத் தவிருங்கள் என்றார் புலவர். எதற்காக என்ற விளக்கமும் தந்தார். அது, 'எல்லாரும் உவப்பது அன்றியும் நல் ஆற்றுப்படூஉம் நெறியுமார் அதுவே' அனைவரையும் மகிழ்ச்சிப்படுத்துவதோடு அதுவே

உம்மையும் நல்வழிப்படுத்தும் என்பதால். இந்தத் தெளிவே தமிழரை நாகரிகம் செழித்த இனக்குழுவாகப் பறைசாற்றுகிறது.

கூற்றுவன் வரும்முன் செய்துமுடிக்கவேண்டிய கடமைகள் காலமாற்றத்தால் வேறுபடுவதைக் காட்டும் கண்ணாடி, பத்திமை இலக்கியம்.

'கூற்றம் வந்துமைக் கொள்வதன் முன்னமே போற்ற வல்லீரேற் புள்ளிருக்கு வேளூர்' (05.079.02) என்று, கூற்றுவன் வரும்முன் இறைவனை நாடச் சொன்னது அப்பரின் பத்திமை. 'சீற்ற மாயின தேய்ந்தறுங் காண்மினே' தீக்குணங்களை விளக்கி வைப்பதே அதன் பயனென்றும் குறித்தார் அவர். இறைவனையடையும் முன்னர் அல்லது இறைவனையடைய தேவைப்படுவது தீக்குணம் அகற்றல் என்று அழுந்தக் கூறியது அப்பருடைய சங்கந்தழுவிய சமூகநெறியைப் படம்பிடித்துக் காட்டுவது.

கடமைகளும் நோக்கங்களும் வேறுபட்டாலும், சிந்தனைத் தெளிவு தமிழ்ப் பாடியோருக்கு மரபில் வந்த பெருஞ்சொத்து.

'கடவூர் வீரட்டத்துப் பெருமானை நாளும் நினையாத் தகவிலா நெஞ் சத் தெளிவிலேன் செய்வதென்னே திருப்புகலூரனீரே' (04.054.05), 'பழியுடை யாக்கை தன்னிற் பாழுக்கே நீரிறைத்துஞ்.. மாயமுந் தெளியகில்லேன்,' என்றெல்லாம் தெளிவு கிட்டாது புலம்பிய அப்பர், சிந்தையில் தெளிவு கிட்டாமல் தடுப்பவை இன்னின்ன என்றும் எடுத்துரைத்தார். உடலைப் பெரிதெனக் கருதுதல், ஐம்புலனுக்குக் கட்டுப்படல், உலகவாழ்வில் விருப்புக் கொள்ளல் என்று பட்டியல் நீளும். இவற்றின் பிடியிலிருந்து விடுபட முதலில் தேவை, இறைவனை உள்ளத்தில் அமர்த்தலே என்றார்.

சரியை கிரியை யோகம் ஞானம் என்ற சைவ நாற்பதங்களில், தெளிவு ஞானத்தைக் குறிக்கிறது. அதனால்தான், சிந்தையில் தெளிவு வீடுபேறருளும் வா யிலெனவும் பதிகம் பாடினார். இறைவனையுணரும் ஞானத்தை எட்டாக் கனிபோல் சித்திரித்த நெறியாளர்களுள், அதை எளிதான நெறியெனவும் எளியோருக்கான வழிமுறையெனவும் எடுத்தோதியது அவருடைய சிறப்பான பணிகளுள் ஒன்று.

### சிந்தையில் சிவமே தெளிவின் முதற்படி

தம் செயல்பாடுகளையே எடுத்துரைத்துப் பத்திமை வளர்த்தவரல்லவா அவர்ஞ் நெகிழ்ந்துருகும் சிந்தையில் இறைவனை அமர்த்திய தம் உணர்வுகளைப் பதிவு செய்தார்.

‘உண்மெலி சிந்தையனாகி’ உள்ளே நெகிழ்ந்து உணர்ந்துருகும் சிந்தையோடு திருவையாறு வந்தடைந்ததையும் (04.03.06), சிந்தையில் மறந்தும்கூட இறைவரைப் பிரியவிடாத உறுதி பொருந்தியிருந்ததையும் (என் சிந்தையுள் பிரியுமா றெங்ஙனே பிழைத்தேயும் போகலொட்டேன் 04.020.07) சொன்னவர், பின்னொன்றைப் பகிர்ந்து வியப்பில் ஆழ்த்தினார்.

‘பொன்னொத்த மேனிமேல் பொடியுங்கண்டேன்;புலித்தோலுடை கண்டேன்; மின்னொத்த நுண்ணிடையாள் பாகங் கண்டேன்; மிளிர்வதொரு பாம்பும் அரைமேற் கண்டேன்; அரக்கன் தன்னை அலற அடர்த்திட்ட அடியுங் கண்டேன்; சின்ன மலர்க்கொன்றைக் கண்ணி கண்டேன்’, என்று இறைவனின் திரு அடையாளங்களைக் கண்முன் கொணர்ந்தார். இறையுருவைத் தள்ளிநின்று களித்தாரென்று கேட்டோர் எண்ணுமுன்னர், அடுத்த வரியில் ‘சிவனைநான் சிந்தையுட் கண்டவாறே,’ (06.097.11) என்று சொல்லி இறைவனை உள்நிறுத்தும் பெட்டகம் சிந்தையெனக் காட்டினார்.

‘அஞ்சியாகிலும் அன்பு பட்டாகிலும் நெஞ்சம் வாழி நினை நின்றியூரரை’ என்று சொன்னவரில்லையாஞ். எதற்காக



ஆடவல்லான், திருபுகலூர்

இறைவனை உள்நிறுத்த வேண்டும்? ஈசனை உள்நிறுத்துவதால் கிடைக்கும் பயனென்ன? என்று எதிர்க்கேள்வி கேட்டோர்க்கும் பதிலளிக்கத் தவறவில்லை நாவுக்கரசர். இறைவனை உள்நிறுத்தித் தெளிவுபெற்ற சிந்தையின் செயல்களுக்கு, அச்சமூட்டும் பிறவி வினைகளை ஒழிக்கும் ஆற்றலுண்டு என்று விளக்கமளித்தார்.

சிந்தை வெள்ளப் புனலாட்டிச் செஞ் சொன் மாலை யடிச்சேர்த்தி எந்தை பெம்மா னென்னெம்மா னென்பார் பாவநாசமே (04.015.11) என்றும், ஈசனைச் சிந்தையால் நினைவார்

வினை தேயுமே (05.014.08) என்றும் சொல்லி, சிந்தையில் சிவனை வைக்கப் பாவமும் வினைகளும் ஒழியுமென்றார். கூடுதலாக, சித்தத்துருகிச் சிவனெம்பிரானென்று சிந்தையுள்ளே பித்துப்பெருகப் பிதற்றுகின்றார் பிணி தீர்த்தருளாய் (04.110.10) என்று பிறருக்காகவும் இறைவனிடம் விண்ணப்பித்தார்.

ஆக, சிந்தையுள்ளே விளங்கும் அன்பு வெள்ளத்தால் நீராட்டப் பாவம் தொலையும்; சிந்தையால் நினைக்க வினை தேயும்; சிவனே சிவனேயென்று சிந்தையுள் அன்பு பெருகப் பிதற்றுவோர் பிணி தீரும். சிந்தையில் தெளிவு பெறுவதற்குக் கடினமான நுட்பத்திறன்களைப் படிப்பித்தோருள், அன்பையும் நீங்கா நினைப்பையும் நெகிழ்வையும் பழகச்சொன்ன நாவுக்கரசர் விந்தை மனிதர்தான்.

## சிந்தையில் தெளிவு

உள்ளக் கசடுகள் களைவதால் பிறக்கும் தெளிவில் பேருருவாக நிறைபவன் இறைவன்; அத்தெளிவே இறைவனையுணர்த்தும்; அத்தெளிவே மிகச்சிறந்த இறையருளும்கூட. 'தெரிபுரி சிந்தை யார்க்குத் தெளிவலா லருளு மில்லை', என்று இதைத்தான் அப்பர் கூறினார்.

## தெளிவு கிடைக்க ஒருவர் செய்ய வேண்டியதென்ன?

படிப்படியாக நிகழவேண்டிய செயலது. 'தெள்ளித்தேறித் தெளிந்து நெய்த்தானனை உள்ளத்தால் தொழுவார் உம்பர் வாணரே' (05.034.07) என்றார் அவர். இறையெனும் பரம்பொருளை ஆராய்ந்து, ஆய்ந்ததால் புரிந்தபின் நம்பிக்கைக் கொள்ள, அந்த முழுமன நம்பிக்கையால் கிட்டுவதே தெளிவாம். தெளிந்தபின் உள்ளத்தால் தொழுபவர் மேலுலகத்தவர்க்கிணையான இன்பம் பெறுவர்.

## மாணிக்கவாசகர்

நானும்என் சிந்தையும் நாயகனுக் கெவ்விடத்தோம்
தானுந்தன் தையலுந் தாழ்சடையோன் ஆண்டிலனேல்

"இறைவன் உமையாளுடன் ஆட்கொள்ளவில்லையெனின், நானும் என் சிந்தையும் எங்கிருப்போம்.. நாயகனுக்கு அருகிருக்கத்தான் இயலுமா?," என்று கோத்தும்பியிடம் தம்மிலிருந்து சிந்தையைப் பிரித்து வைத்துக் கேட்டது, குற்றமற்றுப் பொலிவுறத் துலக்கவேண்டிய தனித்ததொரு பொருளாகச் சிந்தையைக் காட்டுகிறது.

அந்தத் துலக்கலின் பயனே அப்பர்

கூறிய சிந்தையில் தெளிவு. என்ன செய்தால் தெளிவு கிடைக்கும் என்று மக்கள் கேள்வி எழுப்பினர்போலும். புரியாதாருக்குத் தாம் பழகிய முறையையே விளக்கினார்.

‘குரங்காடுதுறையனைஞ்தண்மதி ஒளியனை நினைந்தேனுக்கென் உள்ளமும் தெளிவினைத் தெளியத் தெளிந்திட்டதே’ (05.063.03) இறைவனை நினைக்க உள்ளம் தெளிவுறுமென்று மிக எளிய வழிமுறையைப் பகர்ந்ததால்தான் இன்றும் அவர் எளியோரில் ஒருவர்.

மற்றோரிடத்தில், ‘அல்லல் தீர்க்கும் அருமருந்தை ஆமாறறிந்தென் உள்ளந்தெளிந்து, எறும்பியூர் மலைமேல் மாணிக்கத்தைச் செழுஞ்சுடரைச் சென்றடையப் பெற்றேன் நானே’ (06.091.02), என்று இறைவனைத் தக்கவாறு உணர்வதால் உள்ளத் தெளிவு கிடைக்குமென்றார். ‘இறைவனைத் தக்கவாறு உணர்தல்’ என்ற பெருங்குடைக்கீழ், உலகத்தோர் அனைவர்பாலும் வேற்றுமை யின்றி அன்பு பாராட்டி அறம் வளர்த்து மனிதம் பேண நெஞ் சத்தை நல்வழிப்படுத்தலைக் கொணர்ந்ததே, வேறுபட்ட சிந்தனையாளராக நாவுக்கரசரை முன்னிறுத்துகிறது. இதுவும் அவருடைய சிந்தையின் தெளிவு.

இறைவனை நினைத்தலும் உணர்தலுமே தெளிவுக்கான வழிமுறைகளாம். இறைவனையடைய எளிய வழிகளே தேவை என்ற இந்தத் தெளிவே அவர் வலிமை. அதைச் சொல்லிக்கொண்டே இருந்தது அவருடைய சமூகப் பார்வை.

அதேபோல, தேவர் கூடி இருக்குச் சொல்லி, ‘எந்தை நீ சரணம்’ என்று பரவி ஏத்தச் சிந்தையுள் சிவமதானார் திருச்செம்பொன்பள்ளியார். ஆனால், அடியவர் நிலையோ வேறு. ‘எந்தை எம்பிரானே என்றென்று உள்குவார் உள்ளத்து என்றும் சிந்தையும் சிவமும் ஆனார் திருப்பயற்றூரனாரே’ என்று, அன்பால் உருகும் அடியவர் சிந்தையின் தெளிவுக்கு, இறைவனை நினைந்துருகும் அன்பொன்றே தேவை என்பதை விடாதுரைத்தார் அவர்.

இறைவனையுணரும் ஆழ்நிலையை எய்தும் உயர்ந்த பயிற்சியென அவர் சிந்தையில் தெளிவைப் பார்த்தார். தாமடைந்த அந்தப் பேரின்ப நிலையை, ‘சிந்தையைத் தெளிவைத் தெளிவாய்த்ததோர் எந்தையைக் கண்டுகொண்டதென் உள்ளமே’ (05.098.02), என்று பகிர்ந்து பெருமகிழ்வுடன் களித்தார்.

‘சிந்தையுந் தெளிவுமாகித் தெளிவினுட் சிவமுமாகி வந்தநற் பயனுமாகி’ (04.048.05) ஆப்பாடி யிறைவர் உறைகின்றார் எனுமிடத்து சிந்தையில் இறைவனை வைக்கக்

கிடைப்பது தெளிவு; தெளிவுபெற்ற சிந்தையால் கைக்கூடும் சிவமெனும் தவநிலை; அந்நிலையால் கிட்டுவதோ நற்பயனாம் வீடுபேறு என்று தெளிவின் பயனை எடுத்துரைத்தார் அப்பர்.

எண்ணிய எண்ணியாங்கு கிட்டிய மனநிலையில், ‘கருவனே கருவாய்த் தெளிவார்க்கெலாம் ஒருவனே உயிர்ப்பா யுணர்வாய் நின்ற திருவனே’ (05.013.05), என்று மேலும் பாடிக் களித்தார். மூலப்பொருளானவன் இறைவன்; மூலம் அவனென்று தெளிந்தவர்க்கு ஒப்பற்றவனாகவும் உயிர்ப்பாகவும் உணர்வாகவும் நிற்பவன் அவன். தெளிவு பெற்ற ஆசானின் உணர்வலைகள் இவை.

## தெளிவிலாச் சிந்தை

தெளிவிலாச் சிந்தையோடு, கரப்புறு(வஞ்சம்நிறை) சிந்தையையும் திருகு (குழப்பமிகு) சிந்தையையும் சுட்டி வருந்தினார் அவர். கரப்புறு சிந்தையர் காண்டற்கரியவராம் சிவனார். திருகு சிந்தையைத் தீர்த்துச்செம்மை செய்து தேன்போன்று இனியானைப் பற்றி வழிபடுவோர்க்கு அருகில் நின்று அருள்புரிவார் ஆனைக்கா அண்ணலென்று குறித்தார். இறையன்பிற்கு மேலாக அடியார் தங்களை மேம்படுத்திக் கொள்ளும் பணி ஒன்றுண்டு. அதுவே, சிந்தையைச் செம்மை செய்யும் பெரும்பணியாம்.

மால்கொள் சிந்தையை (மயக்கமிகு சிந்தை) நயமாகச் சாடுகிறது நான்காம் திருமுறை. நரியானது வரால் மீனைக் கவ்வச்சென்று ஏற்கனவே வைத்திருந்த தசைத்துண்டை இழந்ததுபோல, கிட்டாததை எண்ணிக் கிட்டுவதை இழக்கும் மயக்கம்கொண்ட சிந்தையரின் மயக்கம் தீர்க்கும் வழிசெய்வார் திருவதிகை வீரட்டனார் (04.027.05) , என்று நம்பிக்கை வழங்கும் பாடலிது.

அதேபோல, தெளிவில்லாமல் திரிந்த மக்களிடையே மனவருத்தத்துடன் பேசியதுபோல் அமைந்த பாடலொன்று

தேற்றப் படத்திரு நல்லூ ரகத்தே சிவனிருந்தால்
தோற்றப் படச்சென்று கண்டுகொள் ளார்தொண்டர் துன்மதியால்
ஆற்றிற் கெடுத்துக் குளத்தினிற் றேடிய வாதரைப்போல்
காற்றிற் கடுத்துல கெல்லாந் திரிதர்வர் காண்பதற்கே
(04.097.06)

‘ஊரார் அனைவரும் தெளிவாக உணரும்வண்ணம் திருநல்லூரிலே சிவனார் வீற்றிருக்க, அங்கவரைக் கண்டு நிறைவுறாத் தொண்டர், ஆற்றில் இழந்த

பொருளைக் குளத்தில் சென்று தேடுவோரைப்போல, இறைவனைக் காணக் காற்றைவிட வேகமாக உலகெங்கும் சுற்றித் திரிகின்றாரே', என்று வருந்தினார்.

சிவனாரைத் தெளியாத மேலும் இருவரைச் சாடினார் அவர். அவர்கள், திருமாலும் நான்முகனும். தேடித் தேடொணாத் தேவனை தன்னுள் கண்டுகொண்டதால், அவர்கள் இருவரும் திலகமண்டலம் தீட்டிக் கோயிலை வலம்வராமல், அலரும் நீருங்கொண்டு ஆட்டித் தெளிவு பெறாமல், உலகமூர்த்தி ஒளிநிறவண்ணனை எங்கெங்கோ சென்று காணக்கிளம்பிய நிலையை எண்ணி நொந்தார்.

தாமுரைத்த தெளிவுரைகளைப் புரிந்து கொள்ளாதவர்களுக்கு விடாது அறிவுறுத்திக் கொண்டே யிருந்தது அப்பருடைய நம்பிக்கை நீங்கா மனம் கூற்றம் வந்து குமைத்திடும்போது, தெளிவு கிடைக்குமா? அதனால் முன்னரே, வாட்போக்கியில் உறையும் இறைவருக்கு விளக்கேற்றுங்கள் என்றார் (05.086.04).

'ஐயத்தின் நீங்கித் தெளிந்தார்க்கு வையத்தின் வானம்நனிய துடைத்து' என்ற வள்ளுவர் சொன்னதை இறைவனை நெருங்குவதற்கான வழிமுறையாகப் பத்திமையில் வலியுறுத்தியது அப்பருடைய தொண்டில் தோய்ந்த அன்புநெறி.

தெளிவு குருவின் திருமேனி காண்டல்
தெளிவு குருவின் திருநாமஞ் செப்பல்
தெளிவு குருவின் திருவார்த்தை கேட்டல்
தெளிவு குருவுருச் சிந்தித்தல் தானே

என்று திருமூலர், சிவனையே குருவாகக் கொண்டு பாடியதில், 'தெளிவு குருவின் திருவார்த்தைக் கேட்டல்' என்றது மட்டும் அப்பரென்ற ஆசிரியரைக் குறிப்பதாகவே எண்ணத் தோன்றுகிறது. ஏனெனில், இறைவன் மாசற்ற தூயநெறியினன், கலக்கும்வினை போயறத் தேற்றன் திருவண்ணாமலையன் என்னும், கலக்கமில்லாக் குழப்பமில்லாத் தெளிவே அவனையுணரும் வழியென்றுத் தெளிவுபடுத்திய நெறியாளர் அவர்.

நாவுக்கரசர், தாம் உணர்ந்ததையே அனைவருக்கும் படிப்பித்த நல்லவர். அதனால்தான், 'செறிகொண்ட சிந்தைதனுள் தெளிந்து தேறித் தித்திக்குஞ் சிவபுவனத் தமுதம் போலும்' ஒருமுகப்படுத்தப்பட்ட சிந்தையுள் தெளிந்து தேறித் தித்திக்கும் அமுதமென்று இறைவனை நினைந்து நெக்குருக முடிந்தது அவரால்.

## இறைவனின் தெளிவு

தெளிவு மனிதருக்கு மட்டுமானதா? இறைவனுக்குத் தெளிவு தேவையில்லையா? ‘இதனை இதனால் இவன்முடிக்கும் என்றாய்ந்து அதனை அவன்கண் விடல்,’ என்று இறைவன் தெரிந்து வினையாடிய தன்மையை அப்பரின் வாழ்வைக் கொண்டு தெளிந்திட முடியும். அப்பரைக் கொண்டு முடிக்க நினைத்த பணிகளுக்காக அவரைத் தேர்ந்தான் போலும் இறைவன்.

அப்பரும் அதைத் தம் பாடலில் ஆமோதித்தார்

தான்தெரிந்தங் கடியேனை யாளாக் கொண்டு
தன்னுடைய திருவடியென் தலைமேல் வைத்த
தீங்கரும்பைத் திருமுதுகுன் றுடையான் தன்னைத்
தீவினையேன் அறியாதே திகைத்த வாறே
(06.068.04)

முதலில் அறியாது திகைத்தபோதும், பணித்த பணியைச் செவ்வனே முடித்த செம்மல் நாவுக்கரசர். அவை சமூக நலன், பத்திமையாளர் பார்க்கத் தவறும் சமூக நீதி, மற்றும் இறைப்பற்று மறைத்துவிடும் மனிதப்பற்று. அவ்வாறு தம் பணியை முடிக்க இறைவன் நாவுக்கரசரைத் தேர்ந்ததற்குக் காரணம் அவருடைய சிந்தனைத் தெளிவே என்பதில் ஐயமுண்டோ?

‘கள்ளனேன் கள்ளத் தொண்டாய்க் காலத்தைக் கழித்துப் போக்கித் தெள்ளியேனாகி நின்று தேடினே னாடிக் கண்டேன்’ கள்ளத் தொண்டனாகக் காலத்தைப் போக்கியபின், தெளிவு பெற்றவனாக இறைவனை நாடி உண்மையைக் கண்ட அப்பர் மக்களில் ஒருவர்.

ஆனால்,

சங்கொத்த மேனிச் செல்வா சாதனா ணாயே னுன்னை
எங்குற்றா யென்ற போதா விங்குற்றே னென்கண் டாயே

என்னுயிர்ப் போகின்ற வேளையில் ஐம்புலன்களின் செயல்குன்ற, “எங்கிருக்கிறாய்?” என்று நான் கேட்டால், “இங்குற்றேன்” என்று நீ கூறியருள வேண்டும் என்று உரிமையுடன் விண்ணப்பித்த தன்மையால், நெகிழ்ந்துருகும் அன்பையே பேராற்றலெனக் கொண்டு சிந்தையில் தெளிவு பெற்ற அப்பர், திருத்தொண்டரில் ஈடிணையற்றவர்.

நன்றி:டாக்டர் மா. இராசமாணிக்கனார் வரலாற்றாய்வு மையம், திருச்சிராப்பள்ளி.



# கற்குடிக்கோயில்

பகுதி–3



**இரா. கலைக்கோவன்,**
இயக்குநர்,
டாக்டர் மா. இராசமாணிக்கனார்
வரலாற்றாய்வு மையம்,
திருச்சிராப்பள்ளி

(சிராப்பள்ளியிலிருந்து, சோமரசம்பேட்டை செல்லும் சாலையில் உள்ள உய்ய கொண்டான் திருமலை என்ற இறைகோயிலின் சிற்பங்கள், கட்டுமானம் குறித்த கட்டுரைத் தொடரின் மூன்றாம் பகுதி)

## ஐந்தாம் நிலை

வளாகத்தின் இறுதிநிலையாக அமைந்துள்ள ஐந்தாம் நிலையில் சிற்பமண்டபத்தின் பின்னிருக்குமாறு தற்போது நடராஜர் மண்டபமாக விளங்கும் முதலாம் இராஜேந்திரர் கால மாடமண்டபமும் மைவிழியாள் திருமுன்னின் வடக்கிருக்குமாறு விழுமியதேவர் வளாகமும் அமைந்துள்ளன. நடராஜர் மண்டபத்தில் பின்சுவரையொட்டி அமைந்துள்ள மேடையில் சோமாஸ்கந்தர், ஆடவல்லான், உமா சந்திரசேகரர், பிச்சைத்தேவர், பலித்தேவர், சண்டேசுவரர், பிள்ளையார், தேவியருடன் முருகன் ஆகிய இறைவடிவங்கள் செப்புத்திருமேனிகளாகக் காட்சி தருகின்றன. இம்மண்டபத்தின் கிழக்கில் சுதைக்காவலர்களுடன் அமைந்துள்ள வாயில் விழுமியதேவர் வளாகத்திற்கு வழிவிடுகிறது. இவ்வாயிலுக்கு முன்னிருக்குமாறு மண்டபத்தில் நந்தியொன்று இருத்தப்பட்டுள்ளது.

## விழுமியதேவர் திருமுன்

விழுமியதேவர் திருமுன் சுற்றின் தென்மேற்கு மூலையில் கிழக்குப் பார்வையாகத் தேவியுடன் பிள்ளையாரும் தென்சுவரின் மேற்குப் பகுதியில் வடக்குப் பார்வையாகப் பின்னாளைய அப்பர், சம்பந்தர், சுந்தரர், மாணிக்கவாசகர் திருமேனிகளும் உள்ளன. வல முன் கையில் தந்தமும் பின்கையில் அங்குசமும் கொண்டு இலலிதாசனத்தில் உள்ள பிற்சோழர் காலப் பிள்ளையாரின் இட முன் கைத்தேவியை அணைத்துள்ளது.

பின்கையில் பாசம். கரண்டமகுடம் அணிந்துள்ள அவரது இடம்புரித் துளைக்கையில் மோதகம். கரண்டமகுடம், பனையோலைக் குண்டலங்கள், பட்டாடை பெற்று இறைவனின் இடத்தொடையில் அமர்ந்துள்ள இறைவியின் இடக்கையில் தாமரை. வலக்கை இறைவனைத் தழுவியுள்ளது.

சுற்றின் வடசுவரில் வெளிச்சம், காற்று வழங்க இரண்டு சாளரங்கள். வடகிழக்கு மூலையில் மேடையொன்றின் மீது பைரவர், சூரியன், சனீசுவரன் திருமேனிகள் உள்ளன. முன்கைகளில் முத்தலைஈட்டியும் தலையோடும் விளங்க, பின்கைகளில் உடுக்கையும் பாசமும் கொண்டு நக்கராகச் சுடர்முடியுடன் நிற்கும் பைரவரின் பின்னே நாய். மண்டையோட்டு மாலை ஒன்று தோள் வழி இறங்கி முழங்கால்களுக்குக் கீழே படர்ந்துள்ளது. இரண்டு கைகளிலும் தாமரைகளை ஏந்தியுள்ள சூரியனின் தலையைக் கரண்டமகுடம் அணி செய்கிறது. இவ்விரண்டும் பிற்சோழர் காலத்தனவாகலாம்.

சுற்றின் வடமேற்குப் பகுதியில் உள்ள மூன்று திருமுன்களில் முதலாவதில் வள்ளி, தெய்வானையுடன் முருகன் காட்சிதர, இரண்டாவதில் யானைத்திருமகளும் மூன்றாவதில் தவ்வையும் (ஜேஷ்டா) இடம்பெற்றுள்ளனர். பின்கைகளில் சக்தி, வஜ்ரம் கொண்டு முன்கைகளைக் காக்கும், அருட்குறிப்புகளில் அமைத்துள்ள முருகனின் பின்னால் மயில். பட்டாடையும் கரண்டமகுடமும் மூவர்க்கும் அமைய, தேவியர் இருவரும் உட்கைகளில்

மலரேந்தி, வெளிக்கைகளை நெகிழ்த்தியுள்ளனர். தவ்வைத் தொகுதியில் நடுவில் அமர்ந்துள்ள




தவ்வை

தேவி கரண்டமகுடம், பனையோலைக் குண்டலங்கள் பட்டாடையுடன் வலக்கையில் காக்கும் குறிப்புக் காட்ட, வலமுள்ள அவர் மகன் மாந்தன் வலக்கையில் தடியேந்தியுள்ளார். தேவியின் இடப்புறமுள்ள மகள் அக்னிமாதா வலக்கையில் மலர் கொண்டுள்ளார். மூவருமே இடக்கையைத் தொடைமீது இருத்தியுள்ளனர். சுற்றின் வடகிழக்குப் பகுதியில் தனித் திருமுன்னில் சண்டேசுவரர் வலக்கையில் மழுவுடன் சுகாசனத்தில் இருக்க, அருகே புத்தமைப்பாக ஒன்பான் கோள்களுக்கான மேடை.

சுற்றின் நடுவில் ஒருதள நாகர விமானமும் முகமண்டபமும் பெற்று மேற்குப் பார்வையில் உள்ள விழுமியநாதர் திருமுன் உபானம், பாதபந்தத் தாங்குதளம், சதுரபாதம் கொண்ட எண்முகத் தூண்கள் அணைத்த சுவர், கொடிக்கருக்குப் பட்டை பெற்ற குளவுடனான தரங்கப் போதிகைகள் தாங்கும் கூரையுறுப்புகள் கொண்டு அமைந்துள்ளது. சுவரின் முப்புறத்தும் உள்ள உருளை அரைத்தூண்கள் தழுவிய கோட்டங்கள் எளிய மகரதோரணங்கள் பெற்றுள்ளன. கோட்டங்களில் தென்புறத்தே ஆலமர்அண்ணலும் மேற்கில் அம்மையப்பரும் வடக்கில் நான்முகனும் அமைய, வலபியின் பூதவரி சிறப்பாகவும் கபோதக்கூடுகள் சிற்பங்களின்றியும் அமைந்துள்ளன.

கிரீவகோட்டங்களில் தென்புறம் வீணையேந்திய அண்ணலும் வடபுறம் நான்முகனும் மேற்கில் யோகநரசிம்மரும் கிழக்கில் உமாசகிதரும் அமைய, தளக்கூரையின் நாற்புறத்தும் சோழர் கால நந்திகள். திருமுன்



பிச்சைத்தேவர்

கட்டமைப்பைப் பின்பற்றியுள்ள முகமண்டபச் சுவர்க் கோட்டங்களில் தெற்கில் பிச்சைத் தேவரும் வடக்கில் கொற்றவையும் காட்டப்பட்டுள்ளனர். முகமண்டப வாயிலைப் பக்கத்திற்கொருவராகச் சோழக் காவலர் காக்கின்றனர். கருவறையில் இறைவன் இலிங்கத் திருமேனியராய்ப் பல நூற்றாண்டுகளாய்ப் பெற்றிருந்த விழுமிய நாதர் எனும் பெயரிழந்து உஜ்ஜீவநாதராகக் காட்சிதருகிறார்.

திருமுன்னைச் சுற்றிலும் நெருக்கமாக உருளைத் தூண்களும் நன்கு இடம்விட்டு நான்முகத் தூண்களும் பேரளவில் இருவரிசையென அமைந்துள்ளன. நான்முகத் தூண்கள் எளிய போதிகைக் கைகளால் உத்திரமும் நன்கு வளைந்திறங்கும் கபோதமும் தாங்க, உருளைத்தூண்கள் வெட்டுத் தரங்கப் போதிகைகளால் கூரை தாங்குகின்றன. நான்முகத் தூண்களில் முதலாம் பராந்தகர், உத்தமசோழர், முதலாம் இராஜராஜர், முதலாம் இராஜேந்திரர் கல்வெட்டுகள் வெட்டப்பட்டுள்ளன. இங்கும் மைவிழியாள் வளாகம் போலவே முகமண்டப வாயிலின் இருபுறத்தும் முச்சதுர இருகட்டுத் தூண்கள் காட்டப்பட்டுள்ளன.

இறையகச் சுற்றின் மேற்கில் வாயில் பெற்று விரியும் நடராஜர் மண்டபம் கிழக்கு மேற்காக 10. 10 மீ. அகலம், தென் வடலாக 11. 53 மீ. நீளம், 2. 68 மீ. உயரம் பெற்று, முச்சதுர இருகட்டுத் தூண்கள், உருளைத்தூண்கள், ஒட்டுத்தூண்கள் தாங்கும் கூரையுடன் திகழ்கிறது. முதல் வகைத் தூண்களின் பெரும்பாலான சதுரங்கள் வெறுமையாக அமைய, சில பதக்கம் பெற்றுள்ளன. மண்டபத்தின் வடபுறம் ஜகதி, எண் பட்டைக் குமுதம், பாதங்கள் பெற்ற கண்டம், பட்டிகையெனப் பாதபந்தத் தாங்குதளம் கொண்ட மேடை காணப்படுகிறது. இம்மேடையில்தான் கோயிலின் செப்புத்திருமேனிகள் உள்ளன.

இறையகச் சுற்றுச்சுவர் வெளிப்புறத்தே உறுப்புவேறுபாடற்ற தாங்குதளமும் நான்முக அரைத்தூண்கள் தழுவும் சுவரும் வெட்டுத் தரங்கப் போதிகைகள் ஏந்தும் கூரையுறுப்புகளும் பெற்றுள்ளது. சுவரில் மகரதோரணத்துடன் வெறுமையான கோட்டங்களும் வலபியில் பூதவரியும் இடம்பெற, கபோதக்கூடுகள் வெறுமையாக உள்ளன.

## செப்புத்திருமேனிகள்

பல காலகட்டங்களைச் சேர்ந்த எழிலார்ந்த செப்புத் திருமேனிகள் இங்குள்ளன. அவற்றுள் சோழர் காலத்ததாகக் கொள்ளத்தக்க ஆடவல்லான், சோமாஸ்கந்தர் தொகுதிகள் குறிப்பிடத்தக்கன.

## ஆடவல்லான்




முயலகன் முதுகின் மீது வலக்காலை இருத்தி, இடக்காலை உயர்த்தி வலப்புறம் வீசியிருக்கும் ஆடவல்லானின் வல முன் கைக்காக்கும் குறிப்பில் இருக்க, இட முன் கை வேழமுத்திரையில் உள்ளது. பின்கைகளில் உடுக்கை, தீயகல். விரிசடைத் தலையில் இடப்புறம் பாம்பு, வலப்புறம் வணங்கிய கைகளுடன் கங்கை. தலையில் கொக்கிறகு, ஊமத்தம்பூ, மண்டையோடு அமைய, படமெடுத்த பாம்பொன்று வல முன் கையைச் சுற்றியுள்ளது. வளைகள், வீரக்கழல், நெற்றிக்கண், இடச்செவியில் பனையோலைக் குண்டலம், புலித்தோலாடை பெற்று இளநகையுடன் காட்சிதரும் இறைவனின் வலச்செவி நீள்செவியாக உள்ளது. விரிசடைகளுள் ஒன்று பின்புறம் நெகிழ்ந்து இடுப்பைத் தழுவியுள்ளது. இறைவனின் இடப்புறமுள்ள இறைவி கரண்டமகுடம், பட்டாடை, குறங்குசெறி, மகர குண்டலங்கள், செவிப்பூ, மெல்லிய மாலைகள் அணி செய்ய, வலக்கையைக் கடகத்தில் அமைத்து, இடக்கையை நெகிழ்த்தி உள்ளார். இறைவன் திருவடிக்கீழ் குப்புறப் படுத்துள்ள முயலகனின் இடக்கையில் பாம்பு. வலக்கை சுட்டு முத்திரையில் இருக்க, வலக்கால் உயர்ந்துள்ளது.

## சோமாஸ்கந்தர்

சிவபெருமான், உமை, குழந்தை முருகன் இணைந்த இந்தத்



குண்டலமிட்டு, அரும்புச்சரம், தொடைவரை சுருக்கிய ஆடை என அமர்ந்திருக்கும் அவரது இடப்புறம் வலக்கையைக் கடகத்தில் இருத்தி, இடக்கையில் அருட்குறிப்புக் காட்டும் உமை சுகாசனத்தில் உள்ளார். இருசெவிகளையும் வெறுஞ் செவிகளாக வளர்த்துக் கரண்டமகுடம், பட்டாடை அணிந்து தொகுதியுடன் தனித் தேவி ஒருவரும் உள்ளார். கரண்டமகுடம், மகரகுண்டலங்கள், பட்டாடை, ஸ்வர்ணவைகாக்ஷம் அணிந்துள்ள அவ்வம்மையின் வலக்கையில் மலர். இடக்கை நெகிழ்ந்துள்ளது. சோமாஸ்கந்தர் தொகுதியின் சிவபெருமான் சடைமகுடராய்ப் பின்கைகளில் மான், மழு ஏந்தி, முன்கைகளில் காக்கும், கடகக் குறிப்புகள் காட்டி சுகாசனத்தில் உள்ளார். வலச்செவியை நீளவளர்த்து இடச்செவியில் பனையோலைக் குண்டலங்கள், அம்மைக்கும் தந்தைக்கும் இடையில் மண்டல நிலையில் நிற்கும் முருகன் இறைவனை நோக்கிய பார்வையில் நிர்வாணியாகக் காட்சிதருகிறார். பனையோலைக் குண்டலங்கள், கடகவளை, ஸ்வர்ணவைகாக்ஷம் பெற்றுள்ள முருகனின் வலக்கை கடகக் குறிப்பில் இருக்க, இடக்கையில் சிமிழ்.

(தொடரும்)

(திருவிளையாடற் புராணம் தொடர்)

# ஆடலுக்கு ஆட்படுவோம்

## அவையடக்கம், அரங்கேற்றம்

பகுதி-5



காசி ஸ்ரீ முனைவர்
நா.ரா.கி.காளைராசன்
(மேனாள் துணைப்பதிவாளர், அழகப்பா பல்கலைக்கழகம்)

மூவாயிரத்திற்கும் மேற்பட்ட பாடல்களைக் கொண்ட திருவிளையாடற் புராணத்தின் தொடக்கமாக “காப்பு“, “நூற்பயன்“, “வாழ்த்து” பாடப் பெற்றுள்ளன. தொடர்ந்து 6 முதல் 23 முடியவுள்ள பாடல்களில் “கடவுள்வாழ்த்து“ பாடப் பெற்றுள்ளது. கடவுள் வாழ்த்தில் பரஞ்சோதி முனிவர் பரசிவம், சிற்சத்தி, சொக்கலிங்கமூர்த்தி, அங்கயற்கண் அம்மை, சபாநாதர், சோமசுந்தரக்கடவுள், தடாதகைப் பிராட்டியார், வெள்ளியம்பலவாணர், தட்சிணாமூர்த்தி, சித்திவிநாயகர், சுப்பிரமணியர், சரஸ்வதி, திருநந்திதேவர் முதலான தெய்வங்களை வாழ்த்திப் பாடியுள்ளார். தெய்வங்களைத் தொடர்ந்து சமயக் குரவர்களான திருஞானசம்பந்தமூர்த்தி நாயனார், திருநாவுக்கரசுநாயனார், சுந்தரமூர்த்தி நாயனார், திருவாதவூரடிகள், சண்டேச நாயனார் மற்றும் திருத்தொண்டரை வாழ்த்திப் பாடியுள்ளார்.

தந்தைதாள் அடும்பிறவித் தாள்
எறிந்து நிருத்தர் இரு தாளைச் சேர்ந்த

மைந்தர்தாள் வேதநெறி சைவநெறி
பத்திநெறி வழாது வாய்மெய்

சிந்தைதான் அரன் அடிக்கே
செலுத்தினராய்ச் சிவ அனுபவச்
செல்வராகிப்

பந்தமாம் தொடக்க அறுத்த
திருத்தொண்டர் தாள் பரவிப் பணிதல்



விடையாகப் பரஞ்சோதி முனிவரின் காலத்தைக் கூறுகின்றனர். ஆனால், பரஞ்சோதி முனிவர் இது ஒரு 'மொழிபெயர்ப்பு நூல்' என்று தெளிவாக் குறிப்பிட்டுள்ளார்.

பரமசிவனிடத்தில் உபதேசம் பெற்றவர் திருநந்தி தேவர். நந்தி தேவரிடத்தில்

செய்வாம்

(திருவிளையாடற் புராணம்)

என்று பரஞ்சோதி முனிவர் அருளிச் செய்தவண்ணம், அடியார்களாகிய அனைவரும் சண்டேச நாயனார் மற்றும் திருத்தொண்டர்களின் வழியில் வேதநெறி, சைவநெறி, பக்திநெறி ஆகிய இம்மூன்று நெறிகளிலும் வழுவாது வாழ்தல் வேண்டும். வாய் மெய் சிந்தனை இம்மூன்றும் அரன் திருவடிக்கே செலுத்தல் வேண்டும். இதனால் சிவ அனுபவத்தில் செல்வராகிப் பிறவித் தொடரை அறுக்க வேண்டும்.

## முந்து நூல்

திருவிளையாடற் புராணத்தின் காலம் என்ன? என்ற கேள்விக்கு

சனற்குமார முனிவர் உபதேசம் பெற்றார். உள்ளத்தில் நிறைந்த அன்பினால் சனற்குமார முனிவர் வியாசமுனிவருக்குப் புராணக் கதைகளைப் போதித்தார். அந்தப் புண்ணிய சொரூபராகிய வியாசமுனிவர் சூதமுனிவருக்குப் புராணங்களைத் தொகுத்துக் கூறி அருளினார். இவ்வாறு அருளிச் செய்யப்பட்ட புராணங்கள் 18 ஆகும். அந்தப் பதினெண் புராணங்களில் ஒன்று "ஸ்காந்த புராணம்", இதில் "சங்கர சங்கிதை" என்ற தலைப்பில் மதுரையில் இறைவன் நிகழ்த்திய திருவிளையாடல்கள் சொல்லப்பட்டுள்ளன. வடமொழியில் உள்ள இந்தப் புராணக் கதைகளே திருவிளையாடற் புராணத்தின்



மூலக்கதைகள் ஆகும் என்கிறார் பரஞ்சோதி முனிவர்.

## நூல் செய்ததற்குக் காரணம்

திருவாலவாய் என்று புகழுடைய மதுரையில் இறைவன் நிகழ்த்திய திருவிளையாடல்களைக் கூறும் இந்தப் புராணம் வடமொழியில் உள்ளது. இதனால் இதனை அனைவரும் படித்து அறிந்து கொள்வது இயலாததாக உள்ளது. எனவே இதைத் தமிழில் பாடிட வேண்டும் என்று, மதுரையில் வசித்த பெரியோர்கள் கேட்டனர். அவர்களது விருப்பத்தை நினைவில் வைத்துக்கொண்டு ஆன்மலாபத்தை இந்தப் பிறப்பில் அடையப் பெறலாம் என்று மனத்தெளித்து, திருவிளையாடற் புராணத்தைத் தமிழில் மொழிபெயர்த்துப் பாடுவதாகக் கூறியுள்ளார் பரஞ்சோதி முனிவர்.

## மொழி பெயர்த்த விதம்

தலச் சிறப்பு, தீர்த்தச் சிறப்பு, மூர்த்தியின் சிறப்பு என்ற மூன்றும், அந்த மூர்த்தியானவர் அன்புள்ளம் கொண்டு அருளிச் செய்த திருவிளையாடல்கள் என அறுபத்துநான்கும், மூர்த்தியை அருச்சனை செய்தது என ஒன்றும், ஆகமொத்தம் அறுபத்தெட்டு என வரன்முறை செய்துகொண்டு, அறுபத்தெட்டுப் படலங்களாக அமைத்து விரிமுறையாக விருத்தப் பாடல்களில் திருவிளையாடற் புராணத்தைப் பாடியுள்ளார் பரஞ் சோதி முனிவர்.

## அவையடக்கம்

சோமசுந்தரக் கடவுள் திருவாய் மலர்ந்தருளிய “கொங்கு தேர் வாழ்க்கை யஞ்சிறைத் தும்பி“ என்ற பாடலில் குற்றங் கூறிய சங்கப் புலவர்களால் நிறைந்தது மதுரை. இவ்வாறான சிறப்புடைய மதுரை நகரில் இருப்பவர்களுக்கு என்னுடைய சொற்களிலும் குற்றம் கூறுவது எளிது. ஆனாலும் அன்னப் பறவையானது நீரைப் பிரித்துவிட்டு பாலை மட்டும் உண்பதுபோல், எனது பாடல்களில் உங்களால் காணப்படும் குற்றங்களை நீக்கிவிட்டு, அருள்மிகு சோமசுந்தரக்

கடவுளின் சரித்திரமாகிய திருவிளையாடல்களை மட்டும் ஏற்றுக்கொள்ள வேண்டும் என்று பரஞ்சோதி முனிவர் வேண்டுகோள் வைத்துவிட்டுத் திருவிளையாடல் புராணத்தைப் பாடியுள்ளார்.

பல பிளவுகளாகப் பிரிந்து சிகைவிட்டு எரிகின்ற அக்கினி தேவனுடைய நாவினால் சுவையைக் கண்ட ஊனானது, தேவர்கள் உண்ண இனிதாகிய அமுதம் போல் ஆகின்றது. அதுபோல், சான்றோர்கள் நிறைந்த இந்த அவையின் ஊடே எனது பாடல்கள் சென்று, குற்றங்கள் நீங்கி, மதுரம் உள்ளவைகளாக மாறிச் சோமசுந்தரக் கடவுளுடைய திருச்செவிகளிடத்துச் சென்று சேரட்டும் என்று பரஞ்சோதி முனிவர் விண்ணப்பம் செய்து திருவிளையாடல் புராணத்தைப் பாடத் தொடங்குகிறார்.

பூமியின் மேல் பரந்து விரிந்துள்ள கடல்நீரில் உள்ள உப்பினை நீக்கித் தண்ணீரை மட்டும் மேகங்கள் உண்டு, உலக உயிர்கள் எல்லாமும் உண்ணத் தக்கதான நல்ல மழைநீராக மாற்றி வழங்குகிறது. இது போன்று, சொற்பொருள் தெளிந்தவர்களாகிய சான்றோர்கள் என்னுடைய சொற்களில் உண்டாகிய குற்றங்களை நீக்கிச் சோமசுந்தரக் கடவுளுக்கு இனிதாகச் செய்வார்கள்.

'இதுவல்ல, இதுவல்ல' என்று வேதங்களும் எதிர்மறைச் சொல்லினால் துதித்து இளைக்கின்றன. வேதங்கள் மெலிவு அடைவதற்குக் காரணமாயுள்ள, இந்தச் சோமசுந்தரக் கடவுளின் திருவிளையாடல்களை என்னுடைய சொற்களால் கூற இயலுமோ? முடியாது. என்றாலும், திருவிளையாடல்களைக் கூறுவேன் என்பது என்னுடைய மனத்தில் எழுந்த விருப்பம். எனது இந்த விருப்பமானது, நான் கூறும் வழியைக் கேட்கமாட்டேன் என்கிறது. நான் என் செய்வேன்.

## அரங்கேற்றம்

ஆறுகால்களை உடைய தேனீக்கள் இசை பாடிடும் சோலைகளை உடையது ஆலவாய் என்ற மதுரை. அருமைகள் பலநிறைந்து பெருமையோங்கிய திருமுடியை உடையவர் சொக்கநாத சுவாமி. சுவாமியின் சந்நிதியில், தேவர்கள் சூழ்ந்திருக்கும் அறுகால் பீடத்திலிருந்து, மதுரையின் புராணக் கதைகளை அரிதாகிய தமிழினால் பாடி, பரஞ்சோதி முனிவர் அரங்கேற்றினார். இது எவ்வாறு இருந்தது என்றால், ஆதிசேஷனாகிய பாம்பின் மேல் பள்ளிகொண்டிருப்பவர் திருமால். இவர் திருப்பாற்கடலைக் கடைந்து, அதிலிருந்து வெளிவந்த அமிழ்தத்தைத் தேவர்களுக்கு வழங்கியதை ஒத்து இருந்தது.

இத்துடன் திருவிளையாடற்

புராணம் பாயிரம் முற்றுப் பெற்றது. அடுத்து வரும் இதழில் மதுரைக் காண்டம் பாண்டித் திருநாட்டுப் படலத்தைச் சிந்திப்போம். குருவருளும் திருவருளும் திருவாலவாயான் திருவிளையாடற் புராணத்தைப் படிப்போருக்கும் கேட்போருக்கும் ஆகுக.

(குறிப்பு – அமிழ்தத்தை அப்படியே உண்பது சிறப்பு. அமிழ்தம் போன்ற திருவிளையாடற் புராணம் பாடல்களையும் அப்படியே படிப்பதும் கேட்பதும் சிறப்பு. சிறப்புகள் பல கொண்ட திருவிளையாடல் புராணம் மூலப் பாடல்கள் புத்தகங்களையும், வசனங்கள் அடங்கிய புத்தகத்தையும் கோவிலூர் மடாலய நூலகத்தில் மின்னூல்களாகப் பதிவேற்றம் செய்து வைத்துள்ளனர். பிறவிப் பயனை அழிக்கவல்ல இந்நூல்களை அனைவரும் படித்துப் பயனடையலாம்.

தொடுப்புகள்

1) மூலப் பாடல்கள்

2) மதுரைக் காண்டம்

3) கூடற் காண்டம், ஆலவாய்க் காண்டம்

4) திருவிளையாடற் புராணம் வசனம்



# நல்வழி பாடல்கள்

பாடல் 35

பூவாதே காய்க்கும் மரமுள மக்களுளும்

ஏவாதே நின்றுணர்வார் தாமுளரே – தூவா

விரைத்தாலும் நன்றாகா வித்தெனவே பேதைக்கு

உரைத்தாலும் தோன்றா(து) உணர்வு

விளக்கம்:

பூ பூக்காமல் காய்க்கும் மரங்கள் உள்ளன, அது போல் ஏவல் செய்வதற்கு முன் , குறிப்பறிந்து வேலை செய்யும் வேலைக்காரர்களும் உள்ளனர். இதற்கு மாறாக, தூவி விதைத்தாலும் முளைக்காத விதைகள் உள்ளன. அது போல் மூடர்களுக்கு எத்தனை உரைத்தாலும் அவர்கள் மாற மாட்டார்கள்.

# தினசரி வாழ்க்கைக்குத் திருப்புகழ் - 3

## சமய வாதங்களை வெறுத்த சன்மார்க்கத் துறவி



டாக்டர் ஜெயபாலன் வள்ளியப்பன், ஈப்போ, மலேசியா

ஒரு சராசரி மனிதனின் வாழ்க்கையில் சமய நம்பிக்கைகள் மிக முக்கியமான இடத்தைப் பெறுகின்றன. சமயம் என்பது இறை வழிபாட்டு முறைகளையும் தாண்டிய வாழ்க்கை முறையாக அமைந்துள்ளது .

### சமயம் மதம் ஆன்மீகம்

ஆன்மீகம் என்பது இறைத்தன்மையை நோக்கிய ஒரு ஆத்மாவின் பயணம் என்றால், அந்தப் பயணத்திற்கு ஏற்றவாறு ஆத்மாவை பண்படுத்தும் உயர் நெறிகளே சமய நெறிகள் . அடிப்படையில் சமயம் மனிதன், மனிதனாக வாழ்வதற்கு அவனைப் பக்குவப்படுத்தும் சாதனம் . இங்கே மதம் என்பது சமயங்களின் கூட்டணி . இந்து மதம் என்பது சைவம், வைணவம் , சாக்தம், கணாபத்யம் , கௌமாரம் , சௌரம் என்ற அறு சமயங்களின்



கூட்டணி . அடிப்படையில் ஒரே நோக்கமுள்ள பாரத நாட்டின் சமயங்களை இணைத்து இந்து மதம் என்ற கூட்டணியை ஏற்படுத்தியவர் ஆதிசங்கரர். இதைப்போலவே இஸ்லாமிய மதமும் , கிறிஸ்தவ மதமும் ஒத்த நம்பிக்கை உள்ள கிளைச்சமயங்களை உட்பி ரிவுகளாகக் கொண்டுள்ளன.

இப்படி மனிதனை ஆன்மீக நோக்கத்திற்காக பண்படுத்த எழுந்த மதங்கள் இன்று , மனிதர்களை வேறுபடுத்தும் அமைப்புக்களாக மாறியுள்ளன. பல நாடுகளில் மதத்தை முன்னிறுத்தி , மனிதத்தை பின் தள்ளும் கொடுமையையும் காண்கின்றோம் . அரசியல்வாதிகள் மதத்தின் பெயரால் மனிதர்களை பிரித்தாளும் சூழ்ச்சியையும் பார்க்கின்றோம்.

### 15 ஆம் நூற்றாண்டில் சமய பேதங்கள்

15 ஆம் நூற்றாண்டில் , அருணகிரிநாதர் காலத்திலேயே இந்த சமய , மத வேறுபாடுகள் தலை தூக்கத் துவங்கிவிட்டன.

இந்து மதத்தின் உட்பிரிவுகளான ஆறு சமயங்களும் தமக்குள்ளே பிரிவினை காட்டி சண்டையிட துவங்கின. சைவர்களுக்கு திருநாமம் அணிந்த வைணவர்களைப் பார்த்தால் தீட்டு , வைணவர்களுக்கோ திருநீறு அணிந்தவர்களை பார்த்தால் தீட்டு , என்று இரு பிரிவினரும் பரம எதிரிகளாக இருந்தனர். இவர்களைத் தவிர சமணர், பௌத்தர், உலகாயதர், பைரவர், வாமர், மாயாவாதிகள் போன்ற புறச் சமயத்தினரும் தமிழகத்தில் இருந்தனர். இந்த காலகட்டத்தில் தான் வியாபாரிகளாக இஸ்லாமியர்களும், கிறிஸ்தவர்களும் தமிழகத்தை நோக்கி வந்தனர். சமயத்தின் பெயராலும், மதத்தின் பெயராலும் கல்வியாளர்கள் விவாதங்கள் செய்தனர்.

இந்த விவாதங்கள் அருணகிரிநாதரைக் கவரவில்லை. தத்தம் கொள்கைகளை நிலை நிறுத்துவதற்காக சமயவாதிகள் கலகக்காரர்களாக மாறுவதைக் கண்டு அவர் மனம் வெறுத்தார் . சமயப் பிரிவினைகளால் மக்கள் மனம் வெறுத்தனர் . தீய வழிகளிலும் , சிறுதெய்வ வழிபாட்டிலும் ஈடுபடத் துவங்கினர். அதே வேளையில் , சமய அறிஞர்கள் என்று கூறிக் கொண்டவர்கள் மெய்யறிவை நாடாமல் , வீண் விவாதங்களில் காலத்தைக் கழித்தனர். இத்தகைய




இழிநிலையை அருணகிரிநாதர் பல திருப்புகழ் பாடல்களில் கண்டிக்கின்றார். இதற்குக் காரணமானவர்களை வல்லரக்கர் , மூர்க்கர் , என்று குறிப்பிடுகின்றார்.

"பல் அத்தி வாய்க்க அல்லல் படு ஆக்கை

நல்லில் பொறாச் சமயம் ஆறின்

பல் அத்த மார்க்கர் வல்லரக்கர் மூர்க்கர்

கல்விக்கலாத்து அலையலாமோ "

(வள்ளிமலைதிருப்புகழ் பாடல்535)

என்பது வள்ளிமலைத் திருப்புகழ்

"பல துன்பங்களில் உழன்று அல்லல்படுகின்ற இந்த உடம்பை உடையவன் நான். நன் மார்க்கத்தில்சேராதவர்கள், ஆறு சமயங்களின் பல பொருள்களை தவறாகக் கூறுபவர்கள், வல்லரக்கர் ஆகிய இந்த முரட்டுப் பிடிவாதக்காரர்களின் குதர்க்க வாதக் கல்விப் போரில் புகுந்து நான் அலைபடலாமோ ?" என்று முருகனிடம்முறையிடுகின்றார் அருணை முனிவர்.

**பர சமயக் கலை ஆரவாரம் அற**

தத்தமது சமயமே உயர்ந்தது என்று ஆரவாரிக்கும் பர சமயங்களின் ஆரவாரத்தில் இருந்து தப்பிப் பிழைத்திட அருள வேண்டும் என்று முருகனிடம் " பர சமயக் கலை ஆரவாரம் அற " இன்று சீர்பாத வகுப்பில் வேண்டுகிறார் .

அதைப் போலவே "கொடியென பிணி " என்ற பொது திருப்புகழிலும் நிலைத்து நிற்காது அழிவு பெறும் மற்ற சமயக் கூச்சல்களிலிருந்து பிழைத்து வந்துள்ள என் தலை மீது,.. மெய்ப் பொருளை நான் பெற, உனது திருவடியை அன்புடன் வைத்து ஆண்டு அருள்வாயாக

என்று முருகனிடம் உரிமையுடன் கேட்கின்றார் .

“ பொடிவன பர சமயத்துத் தப்பிப்

போந்தேன்.................தலை மேலே

பொருள் அது பெற அடி நட்புச் சற்றுப்

பூண்டு ஆண்டு....... அருள்வாயே ... “

(திருப்புகழ் 1078 கொடியன பிணி (பொதுப்பாடல்கள்)

இவ்வேளையில் “சமயவாதிகள் தத்தம் மதங்களே அமைவதாக அரற்றி மலைந்தனர் “ என்னும் மாணிக்கவாசகப் பெருமானின் கூற்று நோக்கத்தக்கது.

அருணகிரி நாதருக்கு சமயவாதிகள் மேலிருந்த வெறுப்பு

பிரிவினை பேசும் சமயவாதிகள் அருணகிரிநாதர் வெறுத்தார்.

சமயத்தின் பெயரால் சண்டை வளர்க்கும் அவர்களால், அறிவதற்கு அரிதாகிய மெய்ப்பொருளை காண முடியாது என்று திருப்புகழில் பதிவு செய்கின்றார்.

“சினமுடன், தர்க்கித்து, சிலுகிக் கொண்டு,

அறுவரும் கைக் குத்து இட்டு, ஒருவர்க்கும்

தெரிவு அரும் சத்யத்தைத் தெரிசித்து, உன் ......செயல் பாடி

திசைதொறும் கற்பிக்கைக்கு, இனி அற்பம்

திருவுளம் பற்றி, செச்சை மணக்கும்

சிறு சதங்கைப் பொன் பத்மம் எனக்கு என்று ......அருள்வாயே”

(காஞ்சீபுரம் திருப்புகழ் 0493. புன மடந்தைக்கு )

நாள் தோறும், கோபத்துடன் தருக்கம் பேசி சண்டையிட்டுக் கொண்டு, அறுவகைச் சமயத்தாரும் கையால் குத்திக்கொண்டு வாதம் செய்து, ஒருவருக்கும் தெரிதற்கு அரிதான உண்மைப் பொருளை அடியேன் கண்ணாரக் கண்டு, உமது திருவிளையாடல்களைப் பாடி, திசைகள் தோறும் உள்ளவர்கள் யாவருக்கும் எடுத்து உபதேசிக்க, இனி தேவரீர் சிறிது திருவுள்ளம் வைத்து, வெட்சி மாலை மணம் வீசுகின்றதும், சிறிய சதங்கைகளை அணிந்துள்ளதும் ஆன, அழகிய திருவடித் தாமரையை அடியேனுக்கு எப்போது தந்து அருள்வாய்? என்பது இதன் பொருள் .

சமயவாதிகள் தத்தம் சமயமே சிறந்தது என்று கூறிப் பிற

சமயத்தைப் பழித்தும் கடல் போல முழங்கி வாதிட்டும் போரிடுவர். அத்தகைய சமயவாதம் கூடாது. சமய வாதத்தால் இறைவனை உணர முடியாது. “கலகல எனச்சில் கலைகள் பிதற்றுவ” என்பார் அடிகள் பிறிதொரு திருப்புகழில்.

“ சங்குகள் உள்ள கடலைப் போலஆரவாரத்துடன் , சமய விவாதப் போரில் ஈடுபட்டு , சாதாரண மக்களை சமயத்தின் பெயரால் குழப்புகின்ற சமயவாதிகளை “ பஞ்ச பாதகர் “என்றுமிகக் கடுமையாகச் சாடுகின்றார் அருணகிரிநாதர்.கை யசமயவாதிகள்முருகனின் சரண கமலாலயத்தை அறிய மாட்டார்கள்.

“சகர சங்க சாகரம் என முழங்கு வாதிகள்

சமய பஞ்ச பாதகர் அறியாத

தனிமை கண்டதான கிண்கிணிய தண்டை சூழ்வன

சரண புண்டரீகம் அது அருள்வாயே”

(திருப்புகழ் 670நிகரில் பஞ்ச (விரிஞ்சிபுரம்)

என்பது விரிஞ்சிபுரம் திருப்புகழ்பாடல் .

மணிவாசகரின் திருவாசகமும் இதையே எதிரொலிக்கின்றது .

“உவலைச் சமயங்கள், ஒவ்வாத சாத்திரமாம்

சவலைக் கடல் உளனாய்க் கிடந்து, தடுமாறும்

கவலைக் கெடுத்து, கழல் இணைகள் தந்து அருளும்

செயலைப்பரவி,நாம்தெள்ளேணம் கொட்டாமோ”

என்பது திருத்தெள்ளேணம்.

அருணகிரிநாதரைப் பொருத்தவரை சமயமும் , மதமும் மட்டுமே இறைவனை அடைய போதுமானதல்ல. மாறாக சமய ஆரவாரங்கள் , தர்க்கங்கள், இறைவனை நோக்கிய நம்முடைய பயணத்திற்கு தடையாக அமையக் கூடும். இறைவனை கல்வியறிவின் மூலமாகவோ, பூசைகளின் மூலமாகவோ, இன்ன தன்மையன் என்ற பேச்சின் மூலமாகவோ அறிய இயலாது .

இக்கருத்தை திருச்சிராப்பள்ளி திருப்புகழில் பதிவு செய்கின்றார் .

“வாசித்துக் காணொ ணாதது பூசித்துக் கூடொ ணாதது

வாய்விட்டுப் பேசொ ணாதது ...... நெஞ்சினாலே

மாசர்க்குத் தோணொ ணாதது

நேசர்க்குப் பேரொ ணாதது

மாயைக்குச் சூழொ ணாதது ...... விந்துநாத

ஓசைக்குத் தூர மானது மாகத்துக் கீற தானது

லோகத்துக் காதி யானது ...... கண்டுநாயேன்

யோகத்தைச் சேரு மாறுமெய்ஞ் ஞானத்தைப் போதி யாயினி

யூனத்தைப் போடி டாதும ...... யங்கலாமோ

ஆசைப்பட் டேனல் காவல்செய் வேடிச்சிக் காக மாமய

லாகிப்பொற் பாத மேபணி ...... கந்தவேளே ! "

(திருப்புகழ் 561 வாசித்து (திருசிராப்பள்ளி

அப்படி என்றால் இறைவனை எதன் மூலம் உணரலாம்?

பதி ஞானம் என்று சொல்லக்கூடிய தூய அறிவினால் மட்டுமே இறைவனை உணரமுடியும் . "அறிவை அறிவது பொருளென அருளிய பெருமாளே ! "

என்றும்

" அறிவை அறிபவர் அறியும் இன்பந்தனை "

என்றும்

"அறிவால் அறிந்துன் இருதாள் இறைஞ்சும் அடியார் இடைஞ்சல் களைவோனே"

என்றும் பல பாடல்களில் இறைவனை உணரும் மெய்யறிவைப் பற்றி அருணகிரிநாதர்குறிப்பிடுகின்றார்.

## தினசரி வாழ்வில் சமயமும் மதமும்

நம்முடைய தினசரி வாழ்க்கையில் சமயத்தின் பங்கு என்ன ?

ஒரு விமானம் வழித்தடத்தில் ஓடும் வரை , அந்த விமானத்திற்கு சக்கரங்கள் தேவை. வழித்தடத்தில் ஓடிய விமானம், உயரப் பறக்கும் பொழுது சக்கரங்கள் தேவை யில்லை.

ஒரு மனிதனுக்கு சமயமும், மதமும் விமானத்தின் சக்கரங்கள் போல. உலகியல் வாழ்க்கையில் இருக்கும் சராசரி மனிதன் தடம் பார்த்து நடப்பதற்கு அவனுக்கு வழிகாட்டியாக இருப்பவை சமய நெறிகள். ஒரு கட்டத்திற்குப் பிறகு, தனக்குள் இருக்கும் இறைவனை உணர்ந்து, உண்மையான அறிவை பெற்ற பின்பு அவன் ஞானி ஆகிறான் . அத்தகைய ஞானியே சமயங்களை கடந்தவன் ஆகின்றான்.



மனிதனை , மனிதனாக வாழ வழி காட்டுபவை சமயமும் மதமும். இதை தவறாக பயன்படுத்திய மனிதன் தடம் மாறிப் போகின்றான். நம்முடைய தினசரி வாழ்வில் அருணகிரிநாதர் காட்டிய வழியில் அறிவை அறிவது நம்முடைய நோக்கமாகக் கொண்டு , அதற்குரிய சமய நெறிகளின்படி வாழ்க்கையை வடிவமைப்போம் . வள்ளி மணாளன் தாள் பணிவோம் !!

# நல்வழி பாடல்கள்

பாடல் 37

வினைப்பயனை வெல்வதற்கு வேதம் முதலாம்

அனைத்தாய நூலகத்தும் இல்லை நினைப்பதெனக்

கண்ணுறுவது அல்லால் கவலைப்படேல் நெஞ்சேமெய்

விண்ணுறுவார்க் கில்லை விதி.

விளக்கம்:

பாவம் புண்ணியம் ஆகிய இரு வினைப் பயன்களை போக்குவதற்கான உபாயம் வேதம் முதல், அனைத்து நூல்களிலும் இல்லை. அதை கற்பதால் உங்கள் விதி மாறாது. உண்மையான வீட்டு நெறியில் (பண்பான குணங்களோடு) இருப்பவருக்கு விதி இல்லை என்பதை உணர்ந்து கொள். ஆதலால் மனமே நீ கவலைப் படாதே.

## கோவிலூர் ஆதீன வெளியீடுகள்
## கோவிலூர் புதையல்கள் - 20

# திருக்களர் ஸ்ரீ வீரசேகர ஞான தேசிகர் புராணம்

- நூல் அறிமுகம்



- கு. அன்பு மெய்யப்பன்,
உதவிப் பேராசிரியர்,
இராமசாமி தமிழ்க் கல்லூரி,
காரைக்குடி - 3.

இந்நூல் வீரசேகர ஞானதேசிகரின் மாணாக்கரும், வேதமொழி பெயர்ப்பாளருமான ஸ்ரீ விசாந்த சுவாமிகளால் இயற்றப்பட்டுள்ளது. திருக்களர் கோ.ஆ.வீர மடாலயத்தின் தலைவராக இருந்த கிருஸ்ணாநந்த சுவாமிகளால் மதுரை சுப்பராயலு பிரசில்1962இல் பதிப்பிக்கப்பட்டுள்ளது.

முகவுரையை திருப்புவனம் காசிகாநந்த ஞானசாரிய சுவாமிகள் எழுதியுள்ளார்கள். நூலின் ஆசிரியரான சிவாநந்த சுவாமிகளை அறிமுகப்படுத்தும்போது, “மும் மூர்த்திகளின் அவதாரம் போன்று வீரசேகர ஞான தேசிகரின் மாணாக்கர் மூவருள், விஷ்ணு அவதாரம் போன்ற, வேத மொழிபெயர்ப்பு, காசிவாசி (காசியில் வசித்தவர்களையோ, அல்லது காசி நகருடன் தொடர்புடையவர்களையோ குறிப்பிடும்போது காசிவாசி என அடைமொழியோடு அழைப்பது வழக்கம்) சிவானந்த சுவாமிகள், “தேசங் குலவளர்ப்போன் சற்சீடன்”



என்று சொல்லியபடி, நாடெல்லாம் சுற்றித் திரிந்து, பலரிடமும் விசாரித்து, கோவிலூர் மடத்தின் சம்பிரதாயமும், யதி (துறவி) தர்மமும், ஒன்று விடாமல் சட்டப் புத்தகம் போன்று 1430 கவிதைகளாக இயற்றியுள்ளார்கள் என்று அறிமுகப்படுத்துகிறார்.

மேலும், சிவானந்த சுவாமிகள், கோவிலூர் நான்மணி மாலை, சென்னை வியாசர்பாடி கரபத்திர





சிவப்பிரகாச சுவாமிகள் சரித வசநம், வேலூர் தோப்பாச் சுவாமிகள் சரிய புராண வசநம், திருவொற்றியூர் மான்மிய வசநம், யஜுர் வேத மொழிபெயர்ப்பு முதலிய நூல்களையும் எழுதி அச்சிட்டுள்ளார்கள் என்றும் அறிமுகப்படுத்துகிறார்.

நூலின் தொடக்கமாகப் புராணச் சாரம் என்னும் பகுதியில், எண்சீர் விருத்தப் பாடல்களாக 5 பாடல்கள் அமைந்துள்ளன. இது வீரசேகர ஞானதேசிகரின் வரலாற்றைச் சுருக்கமாகக் கூறுகிறது.

இரண்டாம் பகுதி நூலாசிரியர் சிவாநந்த சுவாமிகளின் வரலாற்றை 71 பாடல்களாகப் பாடப்பட்டுள்ளது.

மூன்றாம் பகுதி, வீரசேகர ஞானதேசிகரின் தோத்திரப் பத்து என்னும் தலைப்பில், 10 எழுசீர் விருத்தப் பாக்களாக அமைந்து வீரசேகரரைப் புகழ்கிறது.

நான்காம் பகுதி நால்வர் நான்மணி மாலையாக அமைகிறது. கோவிலூர் குரு மூர்த்தியாகிய கோவிலூர் ஆண்டவருக்கு வெண்பாவாகவும், துறவாண்டவர் என்றழைக்கப்படும் அருணாச்சல ஞானதேசிக சுவாமிகளுக்குக் கலித்துறையாகவும், கருணாநிதி சுவாமிகள் என்றழைக்கப்படும் சிதம்பர ஞானதேசிக சுவாமிகளுக்கு விருத்தமாகவும், திருக்களர் ஆண்டவர் என்றழைக்கப்படும் வீரசேகர ஞானதேசிக சுவாமிகளுக்கு ஆசிரியப்பாவாகவும் பாடல்களை மாலையாகத் தொடுத்துள்ளார்.

ஐந்தாம் பகுதி திருக்களர் ஆண்டவர் என்னும், கோவிலூர் வீரமாமுனிவர் என்னும் தலைப்பில் ஆண்பால் பிள்ளைத் தமிழாக அமைகிறது. ஆனைமுகன் துதி, கவிஞர்கள் துதி, கோவிலூர் நால்வர் துதி என்னும் மூன்று பாக்களுடன், பருவத்திற்கு 10 பாக்கள் வீதம் 103 பாடல்களைக் கொண்டுள்ளது.

ஆறாம் பகுதியாக அமைவது கோவிலூர் வீரமாமுனிவர் புராணமாகும். பாயிரம் தொடங்கி, சமாதி மகிமைப் படலம்வரை 1428 பாக்களைக் கொண்டுள்ளது. இப்புராணத்தில் மிக விரிவாக வீர சேகர ஞானதேசிக சுவாமிகளின் வரலாறு கூறப்படுகிறது. கோவிலூர் மடத்தின் செயல்பாடுகள், பாடம் கற்கும் முறை, உணவருந்தும் முறை என்று பல சுவாரசியமான தகவல்கள் காணக்கிடைக்கின்றன.

துறவியாவதற்கான தகுதிகளாக, மனதில் கள்ளமில்லாதிருப்பது. காமத்தையும், கடுங்கோபத்தையும் தவிர்ப்பது. பொய் பேசுவது, மற்றும் பல தாழ்ந்து குணங்களையும் விட்டு ஒழுக்கமுடையவராக இருப்பவர்களே துறவியாவதற்கான தகுதியுடையவர்கள் என்று ஒரு பாடல் கூறுகிறது. அப்பாடல் வரிகள்,

“ கள்ளமும் காமம் மற்றும் கடுஞ் சினம் கல்லார் நெஞ்சம்

தள்ளரும் பொய்ம்மை மற்றும் தாழ்ந்தபல குணங்கள் விட்டுஞ்.”

அழகு நிறைந்த முகத்தில் உள்ள முடியினை மழித்தலும் நீட்டலும் கூடாது. உடலை மறைக்கும் ஆடை யினை நான்கு முழ வேட்டியாக மட்டுமே அணிதல் வேண்டும். சிறிய துண்டினை அணியக் கூடாது. செருப்பு அணிவதும், வெற்றிலை பாக்கு உண்பதும் கூடாது என்கிறது மற்றொரு பாடல்.

“ வண்ணமார் மழித்த நீட்டல் வரைவிலை வளமா ராடை,

திண்ணநான் முழுமே யாகும் சிறிதுதுண் டணித லில்லை,

மண்ணுநீர் பாத ரக்கை, பாக்கு வெற்றிலை மின்றாம்ஞ்”

வெண்மையான திருநீறு விதிமுறைப்படி அணிந்திருத்தல் வேண்டும். பெண்களைப் பற்றி மனதளவில் கூட எண்ணக் கூடாது. மருத்துவத்தைத் தீண்டலும் கூடாது. தம்மை இகழ்வோரைக் கண்டாலும் இழிவு செய்யக் கூடாது என்பதை வலியுறுத்துவதாக அமைந்த பாடல் கீழ்வருமாறு –

“ வெள்ளிய நீறு கண்டி விதிமுறை யணிதல் வேண்டும்

தள்ளிய மாதர் தன்னைத் தன்னுளத் தெணலும் வேண்டா,

தெள்ளிய வாகடத்தைத் தீண்டலுஞ் சிறிது மில்லை,

எள்ளுவார் தமைக்கண் டாலும மிழிவுசெய் திடுத லின்றாம்”

மடத்தில் ஒரு வழக்கம் உண்டு. காவியாடை உடுத்தியவர்களை சாமி என்றும், வெள்ளை வேட்டி அணிந்தவர்களை ஐயா என்றும் அழைப்பது வழக்கம். அதனை உறுதிப்படுத்தும் பாடல் இந்நூலில் உள்ளது. அப்பாடல்,

அழகிய காவி யாடை யணிந்தவர் சுவாமி என்றும்,

பழையதாம் வெண்மை யாடை பரித்தவ ராயா வென்

மொழிதலோர் முறைமை யாகு முதல்வனை யடைந்து

பழகிநூற் படித்த வற்கே பண்பதா மிந்த நாமம்” அமைகிறது.

துறவிகள் கடைப்பிடிக்க வேண்டிய முறை, மடத்தின் நடைமுறைச் செயல்பாடுகள், பாடம் கேட்கும் முறை, சிந்திக்கும் முறை, ஒழுக்கம், உணவு உண்ணும் முறை இவற்றை எல்லாம் கோவிலூர் மடத்திற்குப் போய்ப் பார்க்காமலேயே தெரிந்துகொள்ளும்படி அழகாகச் சிந்தித்துப் பாடியிருக்கிறார் சிவானந்த சுவாமிகள்.

மடம் பற்றியும், திருக்களர் ஆண்டவர் பற்றியும் அறிய விரும்பும் அனைவரும் படிக்க வேண்டிய நூல் இது.



# காரைக்காலம்மையாரின் அற்புதத் திருவந்தாதி பாடல் நலம் - பாடல் 26



- வாகீச கலாநிதி
கி.வா. ஜகந்நாதன்

## தொங்கும் பொருள்கள்

சிவபெருமானுடைய திருமேனி செவ்வண்ணமாக இருக்கும். "பவளம் போல் மேனி" என்று அப்பர் சுவாமிகள் பாடுவார். அதுவே செம்பொன்மயமாகச் சோதி விட்டு விளங்கும். "பொன்வண்ணம் எவ்வண்ணம் அவ்வண்ணம் மேனி பொலிந்திலங்கும்" என்று பொன்வண்ணத்தந்தாதி கூறும்.

இறைவனுடைய திருமேனி பொன் போன்றதுதான். பொன்னை விரும்பாதவர் யார்? அவனுடைய பளபளப்பான திருமேனியின் பேரழகைக் கண்டு தாருகாவனத்து முனிபுங்கவர்களின் மனைவியரே மயங்கினர். அழகருக்கெல்லாம் அழகனாகக் காட்சி கொடுக்கிறவன் அவன், "சிவம் ஸுந்தரம்" என்று பேசுகிறது மறை. "கண்ட கண்கொண்டு பின்னைக் காண்ப தென்னே?" என்று நாவுக்கரசர் மயங்கிப் போவார்.

உள்ளத்திலே தூய்மையை உண்டாக்கி மனோலயம் உண்டாகும்படி செய்யும் சாந்தமான பேரழகு படைத்தவன் சிவபெருமான். அதனால் மதுரையில் எழுந்தருளும் அவனுக்குச் சுந்தரேசன், சொக்கநாதன் என்ற திருநாமங்கள் உண்டாயின. "புக்கு வந்தார் தம்மேற் பொடிபோட்டுள மயக்கின், சொக்கலிங்கம் என்றெவரும் சொல்லாரோ?" என்பது தமிழ்விடுதூது.

இத்தகைய திருமேனியைக் கூர்ந்து பார்த்தால் சற்றே அச்சம் உண்டாகிறது, அழகைக் கண்டு மனம் மயங்கும். அந்தக் கவர்ச்சிக்குத் தடையாக



எம்பெருமானிடம் சில உறுப்புக்களும் பொருள்களும் இருக்கின்றன. அவனை அணுகிப் பார்த்தால் செம்பொன் மலை போலுள்ள திருமேனியில் சில தொங்கும் பொருள்களைக் காணலாம்;

அவன் அழகன்; ஆனால் துறவியைப் போலச் சடைகளைப் பூண்டிருக்கிறான். அவன் கழுத்தைப் பார்த்தால் ஒரு கறை. திருமார்பைப் பார்த்தால் எலும்பு மாலையும் பாம்பும் தொங்குவதைக் காணலாம். அழகைக் கண்டு களிக்கலாம் என்று போனால் அச்சம் தரும் இந்தப் பொருள்கள் அந்த மகிழ்ச்சியைத் தடுக்கின்றன.

ஆனால் புற அழகை மட்டும் பாராமல் தத்துவத்தையும் அக அழகையும் பார்க்கும் நுண்ணறிவை உடையவர்களுக்கு அவற்றைப் பார்த்தால் அச்சம் உண்டாகாது. மேலும் அப்பெருமானுடைய பெருமையே தெளிவாகும்.

அவனுடைய பொன்மேனியில் மேற்பகுயில் தலையிலிருந்து சடைகள் தொங்குகின்றன. அவற்றைப் பார்த்தால் பொன் மலையின்மேல் மின்னல் தவழ்வதைப் போலே தோற்றும். அந்தச் சடைகளும் செந்நிறம் பெற்றவையே; ‘அழகிய, மணவாளனாகத் தோன்றும் இவன் ஏன் இப்படித் துறவியைப் போலச் சடையைத் தரித்திருக்கிறான்? என்று புறக் கண் கொண்டு நோக்குபவர்களுக்குத் தோன்றும். உண்மையில் அவன் ஞானசொரூபி; சதா யோகியாக இருப்பவன். மங்கையோடு இருந்தாலும் யோகியாக விளங்குபவன். “மங்கையோடிருந்தே

யோகுசெய்வானை” என்பது திருமுறை. அவன் இல்லறத்தார் வழிபடும் மங்கலப் பொருளாக விளங்குபவன்; அதே சமயத்தில் பற்றற்று நிற்கும் துறவியருக்கு ஞானவடி வினனாய்த் தோற்றமளிப்பவன். அவனுடைய சடைகள் இந்தக் கருத்தையே புலப்படுத்துகின்றன.

காரைக்காலம்மையார் இறைவன் பொன் திருமேனியில் காணும் பொருள்களைச் சொல்ல வருகிறார். முதலில் சடைகளைச் சொல்கிறார்.

ஞான்ற குழற்சடைகள் பொன்வரைபோல் மின்னுவன

போன்ற.

அவன் நீலகண்டப் பெருமான். கறுப்பான கழுத்தையுடையவன். பொன்மேனியிலே அது சிறிதே மாறுபாடாகத் தோற்றினாலும் உண்மையை உணர்வாருக்கு அது அழகாகவே இருக்கும்.

“கறைமிடறு அணியலும் அணிந்தன்று”

என்ற புறநானூற்றில் வருகிறது. அந்தக் கறைமிடறு அழகாக இருக்கிறதாம். இறைவன் நஞ்சை உண்டு கண்டம் கறுத்ததனால்தான் தேவர்கள் பிழைத்தனர். தேவமகளிர் மங்கலமுடையவரானர்கள். காரைக்கால் அம்மையார் இந்த நீலகண்டத்தை அடிக்கடி எடுத்துக் கூறுவார்.

அடுத்தபடி அவன் மார்பைக் காட்டுகிறார். அது பொன் மார்புதான். ஆனால் அங்கே தொங்குவன எவை? வண்ணத்தால் அழகு பெற்ற மலர்மாலைகளா? இல்லை, இல்லை. ஒன்றிரண்டு மலர்மாலைகள் இருந்தாலும் அவற்றையெல்லாம் மறைத்துக்கொண்டு மிகுதியாக விளங்குபவை எலும்பு மாலைகள்; அவற்றுக்கு அருகில் பாம்புகள் புரண்டு புரண்டு விளங்கும்.

கறைமிடற்றான் பொன்மார்பின்ஷெ ஞான்றுஏங்கும்

மிக்குஅயலே தோன்ற விளங்கி மிளிருமே

அக்கு அயலே வைத்த அரவு.

தேவருடைய என்புகளையே இறைவன் மாலைகளாக அணிந்துள்ளான். அவை மற்றத் தேவர்களின் பதவிகள் நிலையாதன என்பதைக் காட்டும் அடையாளங்களாக நிலவுகின்றன.

தாருகாவனத்து முனிவர்கள் யாகம் செய்து அவற்றிலிருந்து தோன்றிய பாம்புகளை இறைவனைக் கொல்லும்படி அனுப்பினார்கள். இறைவனுக்கு அவற்றால் எந்தத் துன்பமும் உண்டாகவில்லை. மிகக் கொடிய நஞ்சாகிய ஆலகாலத்தையே அவன் உண்டு கழுத்தில் வைத்தவ யிற்றே! அந்த ஆலகால நஞ்சை உண்டு சீரணிக்காமல் அதற்கே சிரஞ்சீவித்தன்மை கொடுத்தது

போலக் கண்டத்தில் வாழ வைத்தான். பாம்புகளையும் கொல்லாமல் அவற்றையே அணிகலனாகப் பூண்டு கொண்டான். இறைவனைச் சார்ந்ததனால் அவை அச்சந்தரும் நிலை யினின்றும் நீங்கி, அணிகலனாக, அழகு தரும் பொருளாகிவிட்டன. பொல்லாத பிள்ளைகளைத் திருத்தி நல்ல பிள்ளைகளாக்கி அணைப்பது போன்ற அருமையான அருட்செயல் இது. இறைவனை அடைந்தால் பொல்லாதவர்களையும் நல்லவர்களாக்கி ஏற்றுக்கொள்ளும் பெருங்கருணைப்பிரான் இறைவன் என்பதை அந்தப் பாம்புகள் புலப்படுத்திக் கொண்டு விளங்குகின்றன. 'தோன்ற விளங்கி மிளிருமே' என்று பல சொற்களாலே அவற்றின் விளக்கத்தைச் சொன்னதற்குக் காரணம், இறைவனுடைய கருணையை விளக்கும் அடையாளமாக அவை இருப்பதுதான்.

ஞான்ற குழற்சடைகள் பொன்வரைபோல் மின்னுவன
போன்ற கறைமிடற்றான் பொன்மார்பில்ஞான்றுஎங்கும்
மிக்குஅயலே தோன்ற விளங்கி மிளிருமே,
அக்குஅயலே வைத்த அரவு.

அற்புதத் திருவந்தாதியில் 26ஆம் பாட்டு இது

## நல்வழி பாடல்கள்

பாடல் 38

நன்றென்றும் தீதென்றும் நானென்றும் தானென்றும்
அன்றென்றும் ஆமென்றும் ஆகாதே – நின்றநிலை
தானதாம் தத்துவமாம் சம்பறுத்தார் யாக்கைக்குப்
போனவா தேடும் பொருள்

விளக்கம்:

நல்லது இது என்றும், கெட்டது எது என்றும், இதை செய்தவன் நான் என்றும், அவன் என்றும், இது நடந்து இன்று என்றும் அன்று என்றும் வாழ்க்கையில் நடைபெறும் விஷயங்களை பேதம் பிரித்து பார்க்காமல் இருக்கும் பற்று அற்ற நிலையே உண்மை நிலையாகும். கோரைப்புல்லை வெட்டி அதை கட்டுவதற்கு கோரைப்புல்லை கயிறாக பயன்படுத்துவதை விட்டு விட்டு, வேறு கயிறு தேடும் மனிதரைப் போல், இறைவன் நம் உள்ளே இருக்கிறான், அவனே அனைத்திற்கும் காரணம் என்பதை உணராமல் இருப்பது சரியாகாது.

# சேந்தன் இட்ட களியைக் கூடக் களிப்போடு உண்ட ஈசன்



தேனம்மை இலக்குமணன்,
காரைக்குடி

என்னது ஈசன் களி உண்டாரா.. அதுவும் களிப்போடு உண்டாரா என ஆச்சர்யமாக இருக்கிறதல்லவா. ஆம் அடிமுடி அறிய ஒண்ணாதவர், ஆதியந்தம் அற்றவர், தில்லையின் அம்பலவாணர், தன் பக்தனான சேந்தன் இட்ட களியை உண்டு அதைக் களிப்போடு உலகத்தாருக்கும் அம்பலப்படுத்தினார்.

பத்தாம் நூற்றாண்டில் வாழ்ந்த திருவெண்காடர் எனப்படும் பட்டினத்தடிகளின் முதன்மைக் கணக்காளர் சேந்தனார். மருதவாணன் கொடுத்த ஞானத்தால் துறவறமேற்ற பட்டினத்தடிகள் தனது கருவூலத்தில் உள்ள பொருட்களை ஏழை எளியோருக்கு வழங்கிவிடும்படித் தனது கணக்காளரான சேந்தனாரிடம் கட்டளையிட்டார்.

அதன்படிச் சேந்தனாரும் கருவூலத்தைத் திறந்து அதில் உள்ள நவநிதியங்களையும் பொற்குவைகளையும் விரும்பியோர் வந்து எடுத்துச் செல்லலாமென அறி வித்தார். பெருந்திரளான மக்கள் வந்து எடுத்துச் சென்றுகொண்டே இருந்தனர்.

'யார் சொத்தை யார் தானம் அளிப்பது' என வெகுண்ட பட்டினத்தாரின் உறவினர்கள் சோழ மன்னனிடம் சென்று சேந்தனாரின் செயலைப் பற்றிப் புகாரளித்தனர். அதைத் தீர விசாரித்து உண்மையென அறிந்த சோழ மன்னன் சேந்தனாரைக் கைது செய்து சிறையில் அடைத்தான். தான் கூறியபடி செய்த தன் முதுபதி கணக்காளர் சேந்தனார் சிறையில் வாடுவதை அறிந்தார் பட்டினத்தார்.

சோழ மன்னனிடம் சென்று சேந்தனாருக்கு அவ்வாறு கட்டளை யிட்டது தாமே என்று பட்டினத்தடிகள் விளக்கிக் கூறியதும் மன்னன் சேந்தனாரைச் சிறையிலிருந்து



விடுவித்தான். எனினும் பட்டினத்தடிகளிடம் பார்த்த வேலையையும் இழந்து சிறைக்கும் சென்றதால் செய்யும் தொழில் ஏதுமின்றி அவர் திருநாங்கூரிலிருந்து தில்லைக்குச் சென்று விறகு வெட்டிப் பிழைத்து வந்தார்.

விறகு வெட்டிக் கிடைக்கும் கூலியில் அவர் தன் குடும்பத்தை நடத்தியதோடு தினம் ஒரு சிவனடியாருக்கு உணவிடுவதையும் வழக்கமாகக் கொண்டிருந்தார். எவ்வளவு சிரமப்பட்டாலும் இவ்வழக்கத்தை அவர் கைவிடவில்லை. அவ்வளவு முற்றிய சிவபக்தி அவருக்கு.

ஒருநாள் அம்பலவாணரே அவர் வீட்டுக்குச் சிவனடியாராக எழுந்தருளினார். அன்றைக்கு என்று பார்த்து நெல்லரிசிச் சோறு சமைக்கும்படிக்கு வருவாய் இல்லை. எனவே வீட்டில் இருந்த மாவை வைத்துக் களி சமைத்திருந்தார்கள். வந்திருப்பதோ சிவனடியார். ஆயினும் என் செய்வது? இருந்த களியை அவருக்கு மனச் சங்கடத்தோடு பரிமாறினார் சேந்தனார். பக்தன் பரிமாறினால் களியானால் என்ன கூழானால் என்ன சிவபெருமான் அன்போடு அமுது செய்தார்.

இங்கே இவ்வாறு இருக்க அங்கே சோழன் அரண்மனையிலோ பெரும் அமளி. மாபெரும் சிவபக்தனான சோழ மன்னன் நியமம் தவறாமல் தினமும் சிவபூசை செய்து வந்தான். அவன் பூசையில் மகிழ்ந்த அம்பலவாணர் தன் சிலம்பின் ஓசையை அவன் கேட்கும் வண்ணம் அளித்தருளி வந்தார். அன்றைய தினத்துக்கான சிவபூசை செய்தபின் சிவனாரின் சிலம்பொலிச் சத்தம் கேட்கும், கேட்குமெனக் காத்திருந்தான் மன்னன். சில நாழிகைகள் பல நாழிகைகளாகக் கடந்தன. ம்ஹூம் கேட்கவேயில்லை.

’சிலம்பு ஒலிக்கவில்லையே. சிவன் வரவில்லையே, என் பக்தியில் குறை ஏதும் ஏற்பட்டதோ’ என வருத்தத்தோடு துயிலச் சென்றான் சோழமன்னன். அவனது கனவில் தோன்றிய சிவபெருமான் “சேந்தன் அளித்த களி உண்ணச் சென்றிருந்தேன்.” என்று களிபேறுவகையுடன் கூறினார்.

என்னது? சேந்தன் அளித்த களியா?. சிவனே களி கூறும் வண்ணம் களி படைத்தவர் யார்? மன்னன் தில்லைக்கு ஆள் அனுப்பினான். அங்கோ தில்லையம்பதியின் திருமேனியில் களி ஒட்டியிருந்ததைக்



கண்ட தீக்ஷிதர்கள் மன்னனிடம் சேந்தனாரின் சிவபக்தியைப் பற்றிக் கூறினார்கள். வியந்து போனான் மன்னன்.

பட்டினத்தடிகளின் முன்னாள் கணக்காளர் ஆயிற்றே சேந்தனார். அவரிடம் தமிழும் செழித்தோங்கி இருந்தது. மார்கழி மாதம் திருவாதிரைத் திருநாள் அது. அன்றையத் திருவிழாவில் சிதம்பரத்தில் தேரோட்டம் நடைபெறும். ஆனால் என்ன காரணத்தாலோ தேர் நிலையில் இருந்து கிளம்பவே இல்லை. பக்தர்கள் செய்வது அறியாது தவித்தனர். அப்போது அசரீரி ஒன்று ஒலித்தது "சேந்தா. தேர் நடக்கப் பல்லாண்டு பாடுக" என்று.

பக்தர்களோடு பக்தராய் நின்றிருந்த சேந்தனாரின் மேனி புல்லரித்தது. ஆயிரக்கணக்கானோர் இருக்கும் இடத்தில் தன்னைச் சுட்டிக் கட்டளை யிட்டது தில்லையம்பல நடராஜரே என்றுணர்ந்தார். திருவருளின் துணை கொண்டு மனத்தினை ஒருமுகப்படுத்தித் தில்லைநாதனை நினைந்துருகித் திருப்பல்லாண்டு பாடினார்.

"மன்னுக தில்லை வளர்க நம்பத்தர்கள்" என்று இவர் பாட ஆரம்பித்ததுதான் தாமதம், தேர் தானே நிலையிலிருந்து யாரும் வடம் பிடித்து இழுக்காமலே எளிதாகக் கிளம்பிற்று. இவர் பாடப் பாடத் தானே நான்கு ரத வீதிகளிலும் ஓடி நிலை வந்து சேர்ந்தது. இவ்வற்புத நிகழ்வினால் சோழ மன்னன் மட்டுமல்ல, மக்கள் அனைவருமே கண்கூடாகக் கண்டு களித்து இவரின் சிவபக்தியைப் போற்றினார்கள்.

இவ்வாறு இறைவனுக்குக் களியையும் களிபேறுவகையையும் கொடுத்த சேந்தனார் தில்லையை மட்டுமல்ல. திருவீழிமிழலை, திருவாவடுதுறை, திருவிடைக்கழி ஆகிய சிவத்தலங்களைப் பற்றியும் பாடியுள்ளார். அவருடைய செந்தமிழ்த் தொண்டும் சிவபக்தி நெறியும் போற்றுதலுக்குரியது.



## சிவாலயங்களின் சிறப்புகள் - 15



**வே.இராமசாமி,**B.Com.F.C.A.,
Chartered Accountant
பலவான்குடி

சிவனேச செல்வர்களுக்குப் பணிவான வணக்கங்கள்.

சிவாலயங்களின் சிறப்புகளை மாதம் ஒரு திருக்கோயில் என எழுத இருக்கிறேன். இந்தத் தகவல்கள் கோயிலின் ஆலய குறிப்புகளில் இருந்தும் கோயில் குருக்கள் சொல்வதை வைத்தும் எழுதி எழுதியுள்ளேன்.

# திருக்கருகாவூர்

தஞ்சாவூர் கும்பகோணம் சாலையில் தஞ்சாவூரில் இருந்து வடகிழக்கே 20 கிலோ மீட்டர் தொலைவிலும் கும்பகோணத்திலிருந்து தென்மேற்கே 20 கிலோமீட்டர் தொலைவிலும் இத்திருத்தலம் அமைந்துள்ளது

**சுவாமியின் பெயர்:** முல்லைவன நாதர்

**அம்பாளின் பெயர் :** கர்ப்பரக்ஷாம்பிகை

**தல விருட்சம்:**முல்லை

**தீர்த்தம்:**பால்குளம், ஷீரகுண்டம், பிரம்மதீர்த்தம், சத்திய கூபம்,

**புராண பெயர்:**கருகாவூர், திருக்களாவூர்

**பாடியவர்கள்:** அப்பர், திருஞானசம்பந்தர்

**முகவரி:** அருள்மிகு முல்லைவன நாதர் திருக்கோவில்
திருக்கருகாவூர்
பாபநாசம் வட்டம்
தஞ்சாவூர் மாவட்டம்
PIN 614302
தொலைபேசி: 04374 273423

ஆலயம் திறந்திருக்கும் நேரம்: காலை 530 மணி முதல் பகல் 1230 மணி வரையிலும், மாலை 4 மணி முதல் இரவு 8 மணி வரையிலும் திறந்திருக்கும்.

தேவாரப்பாடல் பெற்ற சோழ நாடு காவிரி தென்கரைத் தலங்களில் அமைந்துள்ள 18ஆவது



ஹே சங்கர ஸ்மரஹப் பிரமதாதி நாதரி மன்னாத சாம்பசசிசூட

ஹ ர தி ரி சூ லி ன் சம்போக சுக பிரசவ கிருதபவமே

தயாளோ ஹேமாதவி வநேஸ பாலயமாம் நமஸ்தே !

சிவத்தலமாகும்

**சம்பந்தர் தேவாரம் :**

முத்திலங்கு முறுவல் உமை அஞ்சவே

மத்தயானை மறுகவ்வுரி வாங்கியக்

கத்தை போர்த்த கடவுள் கருகாவூர் எம்

அத்தர் வண்ணம் அழலும் அழல் வண்ணமே.”

**கர்ப்ப ரக்ஷாம்பிகை ஸ்லோகம்:**

ஹிமவத்யுத்தரே பார்ஸ்வே சுரதா நாம யக்ஷிணி

தஸ்யா ஸ்மரண மாத்ரேணா விசல்யா கர்பிணிபவேது

மூலவர் சுயம்பு மூர்த்தி; மேற்புறம் பிருதிவிபாகம்; புற்று மண்ணாலாகியது. சுவாமி திருமேனியில் முல்லைக்கொடி சுற்றிய வடு உள்ளது. புற்று ரூபத்தில் லிங்கம் இருப்பதால் இவருக்கு அபிஷேகம் செய்வதில்லை. புனுகு மட்டுமே சாத்தி வழிபாடு செய்யப்படுகிறது. வளர்பிறை பிரதோஷ நாளில் புனுகு சாத்தி வணங்கினால் தீராத வியாதிகள் யாவும் தீர்ந்துவிடும் என்பது பக்தர்கள் அனுபவத்தில் கண்டு அறிந்த உண்மை. வெளியில் இருந்து கொண்டுவரும் புனுகு சுவாமிக்கு சாத்த அனுமதி இல்லை. தேவஸ்தானமே அதற்குரிய தொகையைப் பெற்றுக்கொண்டு புனுகு சாத்துகிறது.



இத்தலத்தில் தலவிநாயகராக கற்பகவிநாயகர் உள்ளார்.

இத்தலத்தில் உள்ள நந்தி உளிபடாத விடங்கமூர்த்தம் என்பர்

தேவலோகப் பசுவான காமதேனுவால உருவாக்கப்பட்ட ஷீரகுண்டம் என்ற தீர்த்தம் உள்ளது.

### சோமாஸ்கந்த வடிவ கோயில்

தமிழகத்தில் ஒரு சில கோயில்கள் மட்டுமே சோமாஸ்கந்த வடிவத்தில் அமைந்துள்ளது. திருக்கருகாவூர் சோமாஸ் கந்த வடிவில் அமைந்துள்ள சிவஸ்தலம் ஆகும் .சிவபெருமான் உமாதேவியுடனும் முருகனுடனும் இருக்கும் திருக்கோலம் சோமஸ்கந்தர் அருட்கோலம் . இத்தலத்தில் இறைவனுக்கும்,




இறைவிக்கும் இடையில் வள்ளி தெய்வானையுடன் உள்ள முருகன் சந்நிதி உள்ளது.

### பஞ்ச ஆரண்யங்கள்

காவிரியின் தென்கரையிலுள்ள **பஞ்ச ஆரண்யங்கள் ஐந்து அவை:**

1. கருகாவூர் முல்லைவனம்,
2. அவளிவணல்லூர் பாதிரிவனம்,
3. அரதைப்பெரும்பாழி வன்னிவனம்,
4. இரும்பூளை பூளைவனம்,
5. கொள்ளம்புதூர் வில்வவனம்

என்பனவாம். இத்தலம் ஐந்தில் ஒன்றான முல்லைவனமாகும்.

பஞ்ச ஆரண்ய ஸ்தலங்கள் என்று குறிப்பிடப்படும் 5 சிவஸ்தலங்களை ஒரே நாளில் 5 கால பூஜைகளில் கலந்து கொண்டு வழிபாடு செய்து வந்தால் இப்பிறவியில் செய்த சகல பாபங்களும் நீங்கி மறு பிறவி இல்லா நல்வாழ்வு கிட்டும் என்று அகஸ்திய முனிவர் கூறியுள்ளார். அந்த வகையில் திருக்கருகாவூர் ஸ்தலம் விடியற்காலை உஷத்காலம் (காலை 530 மணி முதல் 6 மணி வரை) வழிபாடு செய்ய வேண்டிய தலமாகும்

1. திருக்கருகாவூர் (முல்லைவனம்)

விடியற்கால வழிபாட்டிற்குரியது.

2. திருஅவளிவநல்லூர் (பாதிரி வனம்)

காலை வழிபாட்டிற்குரியது.

3. திருஅரதைப் பெரும்பாழி

(தற்போது அரித்துவார மங்கலம் என்று அழைக்கப்படுகிறது.

(வன்னிவனம்)

உச்சிக்கால வழிபாட்டிற்கு உகந்தது.

4. திருஇரும்பூளை (தற்போது ஆலங்குடி என்ற பெயரில் அறியப்படுகிறது) (பூளை வனம்)

மாலை நேரத்து வழிபாட்டிற்கு உகந்தது.

5. திருக்கொள்ளம்புதூர் (வில்வவனம்)

(தற்போது திருக்களம்புதூர், திருக்களம்பூர் என்ற பெயர்களில் வழங்கப்படுகிறது)

அ ர் த் த ஜ ா ம பூ ை ஜ வழிபாட்டிற்குரியது.

**புராண வரலாறு:**

நிருத்துவ முனிவரும் அவர் மனைவி வேதிகையும் இத்தலத்தில் வசித்து வந்தனர். ஒரு முறை நிருத்துவ முனிவர் ஒரு முக்கிய காரணமாக் வெளியூர் செல்ல நேர்ந்தது. அவர் மனைவி வேதிகை அப்போது கர்ப்பமுற்று இருந்தாள். அக்காலம் நல்ல வெய்யில் காலமாதலால் வேதிகை மிகவும் களைப்புற்று வீட்டில் படுத்து ஓய்வு எடுத்துக் கொண்டிருந்தாள். ஊர்த்துவ முனிவர் என்ற மற்றொரு தவசீலர் இவ்வழியாக சென்று கொண்டிருந்தார். வெய்யில் காலம் காரணமாக் அவரும் மிகவும் களைப்புற்று வீட்டில் இருப்பவர்களால் உணவும் தண்ணீரும் கிடைக்கும் என்று கருதி குரல் கொடுத்து கூப்பிட்டார். ஆனால் யாரும் வெளி வராதது கண்டு உள்ளே எட்டிப் பார்க்க வேதிகை அவருக்கு எதிர்புறமாக திரும்பிப் படுத்து உறங்கக் கண்டார். வேதிகை கர்ப்பமுற்று களைப்பால்

படுத்து இருப்பதை அறியாத அவர் கோபமுற்று அவளை சபித்துவிட்டு சென்று விட்டார். விழித்து எழுந்த வேதிகை பார்ப்பதற்குள் அவர் வெகு தூரம் சென்று விட்டார். முனிவரின் கோபத்திற்கு ஆளாகி விட்ட அச்சத்தில் அவள் முல்லைவன நாதரையும் இறைவியையும் வணங்கி தன் கர்ப்பத்தைக் காப்பாற்றச் சொல்லி வழிபட்டாள். இறைவியும் வேதிகை பக்திக்கு மெச்சி அவள் கருவைக் காப்பாற்றி அருள் புரிந்தாள். ஊர் திரும்பிய நிருத்துவ முனிவர் நடந்தவற்றைப் பற்றி கேள்விப்பட்டு இறைவியை வணங்கி இத்தலத்திற்கு வந்து வழிபடும் கர்ப்பிணி பெண்கள் யாவருக்கும் சுகப்பிரசவம் ஆகும்படியும், அவர்கள் கருவை காத்து ரட்சிக்கும் படியும் வரம் வேண்டினார். அவ்வாறே இறைவியும் வரம் அளித்து அருள் புரிந்தாள். அன்று முதல் இத்தலத்து இறைவி கரு காத்த நாயகி என்றும் கர்ப்ப ரட்சாம்பிகை என்றும் அழைக்கப்படுகிறாள்.


அருள்மிகு கருகாத்தநாயகி
(கர்ப்பரட்சாம்பிகை)

### இங்கு நடைபெறும் பிரார்த்தனைகள்

1. திருமணம் கூடிவர படிக்கு நெய் மெழுகுதல்: திருமணம் கூடிவராத கன்னியரும், குழந்தை இல்லாத பெண்களும் இக்கோவிலுக்கு நேரில் வந்து அம்பாள் சந்நிதி படியில் நெய்யால் மெழுகி கோலமிட்டு அர்ச்சனை செய்து வழிபட வேண்டும். இவ்வாறு செய்வதால் விரைவில் திருமணம் நடைபெறும். குழந்தை இல்லாதவர்களுக்கு மகப்பேறு உண்டாகும்.

2. குழந்தை பாக்கியம் பெற நெய் மந்திரித்தல்: திருமணமாகி பல ஆண்டுகள் ஆகியும் குழந்தை இல்லாதவர்களுக்கு கர்ப்ப ரட்சாம்பிகையின் திருப்பாதத்தில் வைத்து மந்திரித்துக்

கொடுக்கப்படும் நெய்யை தம்பதிகள் தொடர்ந்து 48 நாட்கள் இரவில் சிறிதளவு சாப்பிட்டு வர விரைவில் கருத்தரிக்கும்.

3. சுகப்பிரசவம் ஆக: கர்ப்பம் அடைந்த பெண்கள் சுகபிரசவம் ஆவதற்காக கர்ப்ப ரட்சாம்பிகை திருப்பாதத்தில் வைத்துக் கொடுக்கப்படும் விளக்கெண்ணையை பிரசவ வலி ஏற்படும் போது வயிற்றில் தடவினால் எந்தவித கோளாறுகளோ பேறுகால ஆபத்துக்களோ பின்விளைவுகளோ இல்லாமல் சுகபிரசவம் ஆகும்.

### தல சிறப்புகள்

1 தேவாரப் பாடல் பெற்ற தலங்களில் காவிரியின் தென் கரையில் அமைந்துள்ள 18 ஆவது சிவத்தலமாகும்

2. இத்தலம் சுமார் 2 ஆயிரம் ஆண்டுகள் பழமையானது

3. இத்திருத்தலத்தில் சுவாமி , நந்திகேஸ்வரர் , விநாயகர் மூவரும் சுயம்புவாக தோன்றியவர்கள்

4. காவிரியின் தென்கரையிலுள்ள பஞ்ச ஆரண்யங்களுள் இதுவும் ஒன்று

5. இத்தலத்துக்கு ஈசனான முல்லைவன நாதர் வினைப் பயனால் ஏற்படும் வியாதிகளை தீர்ப்பதால் அவருக்கு பவரோக நிவாரணன் என்றும் ஒரு பெயர் உண்டு

6. இக்கோவிலில் ரதவடிவிலான சபாமண்டபமும் அதில் நித்துவ முனிவர் பூசித்த லிங்கமும் உள்ளது

7. மூலவர் சுயம்பு மூர்த்தி; மேற்புறம் பிருதிவிபாகம் ; புற்று மண்ணாலாகியது. சுவாமி திருமேனியில் முல்லைக்கொடி (இத்தலம் ஒரு காலத்தில் முல்லை வனமாக இருந்ததால் ) சுற்றிய வடு

உள்ளது .

8. பசியோடிருந்த சுந்தரருக்கு இறைவன் கட்டமுதும் நீரும் தந்து

பசிபோக்கிய தலமென்பது நம்பிக்கை

9. இத்தலம் ஒரு சிறப்புமிக்க பிரார்த்தனைத் தலமாகும் ,

இத்தலத்தில் மூர்த்தி, தலம், தீர்த்தம் மூன்றும் சிறப்புடையது

10. தட்ச சாபத்தில் இன்னலுற்ற சந்திரன் ஒரு பங்குனி மாதம்

பௌர்ணமியில் இங்கு வந்து பூஜை செய்ததால் ஒவ்வொரு

பங்குனி மாத முழு நிலா நாளன்று சந்திரன் தன் ஒளியால்

இறைவனை வணங்குவதைக் காணலாம்

11. அம்மை இத்தலத்தில் 64 சக்தி பீடங்களில் முதன்மையான வீர

சக்தியம்மன் ஆக அருள்பாலித்து வருகிறாள்.

12. பிரம்மன் படைப்புத்தொழிலில் ஆணவம் கொண்டதால் படைப்புத்

தொழில் தடைப்பட்டது, இத்தலம் வந்து பிரம்ம தீர்த்தம் ஏற்படுத்தி

நீராடி முல்லை வன நாதரை பூஜித்ததால் மீண்டும் படைப்புத்தொழில் கைவரப் பெற்றார்.

13. இத்தலத்தின் சோமாஸ்கந்தர் , நடராஜர் , ஆறுமுகர் உற்சவ மூர்த்திகள் மிகவும் அழகு வாய்ந்தவை.

14. கோவிலின் மேற்கு கோஷ்டத்தில் லிங்கோத்பவருக்கு பதிலாக

அர்த்தநாரீசுவரர் மிகுந்த பொலிவுடன் உள்ளார்

15. இத்திருக்கோவிலில் உள்ள நவக்கிரகங்கள் சற்று மாறுபட்ட

நிலையில் இருக்கம் சூரியனைச் சுற்றி மற்ற எட்டு கிரகங்களும் சூரியன் பார்த்தவாறு நின்றிருக்கும் . நவக்கிரகங்கள் அபய– வரத

முத்திரைகளுடன் காட்சி தருகின்றனர்

16. திருக்களாவூர் என மக்களால் பொதுவாக அழைக்கப்பெறும்

இத்தலம் மாதவி வனம் , முல்லைவனம் , திருக்கருகாவூர் , கர்ப்பபுரி என்று பல பெயர்களால் நூல்களில் குறிப்பிடப்படுகிறது

17. தமிழ்நாட்டில் கர்ப்பம் தரிப்பது தொடர்பான கோளாறுகளையும்,

இடையூறுகளையும் நீக்கும் ஒரே தலமாக திருக்கருகாவூர் கர்ப்பரட்சாம்பிகை தலம் உள்ளது

18. இத்தல அம்பாளுக்கு சுத்தமான நெய்யால் தீபமிட்டு,

நெய்யால் அம்பாள் திருவடியில் அபிஷேகம் செய்து அந்நெய்யையுண்டால் குழந்தை பிறக்கும் என்ற நம்பிக்கை மக்களிடையே உள்ளது

## கருவளர்சேரி

கும்பகோணம் வலங்கைமான் சாலையில் மருதாநல்லூர் அடைந்து அங்கிருந்து கிழக்கே செல்லும் சாலையில் சென்று கருவளர்சேரி தலத்தை அடையலாம் கும்பகோணத்தில் இருந்து சுமார் 9 கிலோ மீட்டர் தொலைவு .

இங்கு சுயம்பு அகிலாண்டேஸ்வரி சமேத அகத்தீஸ்வரர் கோயில் உள்ளது பெண்களுக்கு திருமணமாகி பின் நல்ல முறையில் கருத்தரித்து வளர இத்தலத்து அம்பிகை அகிலாண்டேஸ்வரி அருள்புரிகிறார் இத்தலத்தில் அம்பாள் சந்நிதியில் காலை நேரத்தில் நெய்யால் மெழுகி கோலமிட்டு அர்ச்சனை செய்து வழிபட வேண்டும் இவ்வாறு செய்தால் விரைவில் திருமணம் நடைபெறும் குழந்தை இல்லாதவர்களுக்கு மகப்பேறு உண்டாகும் மகப்பேறு அடைய விரும்புபவர்கள் இல்லத்துக்கு சென்று இறைவனையும் அம்பாளையும் வழிபட எல்லா நன்மைகளும் பெற்று பெரு வாழ்வு வாழ்வார்கள்

## திவ்ய தேச கவிதை தரிசனம் –32

# திருமணி மாட கோவில்

108 திவ்ய தேசங்களில் முப்பத்தியிரண்டாவது திவ்ய தேசம் திருமணி மாடக் கோவில். சோழநாட்டுத் திருப்பதிகளுள் இது முப்பத்தியிரண்டாவது திவ்ய தேசம் ஆகும். இது திருநாங்கூர் திவ்ய தேசமாகும்.

திருநாங்கூரிலும் திருநாங்கூரைச் சுற்றிலும் அமைந்துள்ள, பதினோரு திருநாங்கூர் திருப்பதிகளுள் திருக்காவளம்பாடி, திருஅரிமேயவிண்ணகரம், திருவண்புருஷோத்தமம் மற்றும் திருச்செம்பொன் செய்கோயில் என்ற நான்கு தலங்கள் குறித்து முன்பதிவில் கண்டுள்ளோம். இத்தலம் திருநாங்கூரில் நாம் காணப்போகும் ஐந்தாவது தலமாகும்.

அழகிய உப்பரிகைகளுடன் கூடிய மாடங்களைக் கொண்ட வீடுகள் நிறைந்த இத்தலத்தில் எம்பெருமான் எழுந்தருளியிருக்கின்ற காரணத்தால், இத்தலம் திருமணி மாடக்கோயில் எனப் பெயர் பெற்றது.



**அழ. மணிமேகலை,**
**காரைக்குடி**

இக்கோவிலுக்கு முன்னுள்ள நாங்கூர் தலங்களில் கூறிய தலவரலாறு போக, மற்றொரு தல வரலாறும் உண்டு. பிரம்மனின் ஐந்தாவது தலையைக் கொய்ததால் சிவனுக்கு பிரம்மஹத்தி தோஷம் ஏற்பட்டது. இந்தத் தோஷத்திலிருந்து எப்படி விடுதலை ஆவது எனப் பெருமாளிடம் யோசனை கேட்கிறார், சிவபெருமான். அதற்குப் பெருமாள், “பூலோகத்தில் ஒரு நல்ல இடம் இருக்கிறது. அங்கே போய் ஏகாதச யாகம், அதாவது பதினொரு யாகங்கள் செய். எல்லா யாகங்களும் ஒரே நேரத்தில் நடக்க



வேண்டும். அப்பொழுது நான் பதினொரு ரூபங்களில் வந்து யாகங்களில் கலந்து கொண்டு, உனது தோஷத்தை நிவர்த்தி செய்வேன்“ என்கிறார். அவ்வாறு சிவன் வந்து சேர்ந்த பகுதி தான் திருநாங்கூர், இத்தலத்தில் உள்ள பெருமாளே முதல் பெருமாளாக வந்து நின்றார்.

இங்குள்ள

மூலவர் – நாராயணன், நந்தா விளக்கு

உற்சவர் – அளத்தற்கரியான்

தாயார் – புண்டரீகவல்லித் தாயார்

தீர்த்தம் – இந்திர புஷ்கரணி, ருத்ர புஷ்கரணி

விமானம் – பிரணவ விமானம்

கோலம் – கிழக்கு நோக்கிய அமர்ந்த திருக்கோலம்

இங்குள்ள மூலவரான நாராயணன் ஒருவராலும் தூண்டப்படாமல் தானாகவே ஒளியுடன் திகழும் தூண்டா விளக்கைப் போன்றவர். அதனால் நந்தா விளக்கானார். பிரயோகச் சக்கரத்துடன் எழுந்தருளியுள்ளார்.

திருமந்திரத்தை ராமானுஜருக்கு உபதேசித்த திருக்கோஷ்டியூர் நம்பி இங்கு விஜயம் செய்துள்ளார். அவருக்கென இங்கு ஒரு தனிச் சன்னதி உள்ளது. சூரிய ஒளி மூலவர் மீது படும் வகையில் கோபுரத்தில் மூன்று துவாரங்கள் அமைக்கப்பட்டு உள்ளன. இங்கு ஐந்து நிலை ராஜகோபுரம்.

திருமணிமாடக் கோவில் குறித்து காப்பியக் கவிஞர், நற்றமிழ் நாவலர், கவிஞர் கோ நா. மீனவனார் எழுதிய ஐந்து பாடல்களும், அவற்றின்

விளக்கங்களும் பின்வருமாறு.

1. பத்ரிகாச்ரமத்தில் இருக்கும் ஸ்ரீமத் நாராயணனே இங்கு 11 திருமால்களில் ஒருவராக முதல் பெருமாளாக இங்கு வந்து நின்றார். பத்திரியிலும் நாராயணன் என்ற பெயரிலேயே அமர்ந்த திருக்கோலத்தில் இருக்கின்றார். இங்கும் அதே நிலையில் அமர்ந்திருக்கின்றார். அதனால் இங்குள்ள பெருமான் நாராயணன் என்று அழைக்கப்படுகிறார். அன்னங்கள் வாழ்கின்ற வயல்கள் அழகு செய்கின்ற இப்பதியில் இந்தப் பத்ரிநாராயணன் வீற்றிருக்கின்றான். படமெடுத்து ஆடுகின்ற பாம்பைப் படுக்கையாகக் கொண்டவன் இப்பதியில் நந்தா விளக்காக வீற்றிருக்கின்றான். குணம் நிறைந்த அடியார்கள் தனது குலதெய்வமான எம்பெருமானை இத்தலத்திற்குச் சென்று வழிபடலாம்.

மணிமாடத் திருக்கோவில்
மகிழ்அன்னம் வாழ்பழனம்

அணிகாட்ட அமைந்தபதி
அருள்மிக்க பத்ரியான்

பணமருவு பாம்பனணயான்
பகர்நந்தா விளக்கானான்

குணமருவும் அடியார்கள்
குலதனத்தை வணங்குமினே.

2. திருநாங்கூரின் கருட சேவைத் திருவிழா இத்தலத்தின் முன்புதான் நடைபெறுகிறது. பதினொரு பெருமாள்களும் இங்கு எழுந்தருள, திருமங்கையாழ்வார் ஒவ்வொரு பெருமாளையும் மாலை மரியாதைகளுடன் வலம் வந்து மங்களாசாசனம் செய்யும் காட்சி தை அமாவாசைக்கு மறுநாள் இங்கு நடப்பது கண்கொள்ளாக் காட்சியாகும். திருமங்கை ஆழ்வார் மங்களாசாசனம் செய்ய மணவாள மாமுனிகளும் இக்கருடசேவையில் எழுந்தருளுவார்.

கண்ணன் ஆயர்பாடியில் நந்தகோபன் மனையில் யசோதையின் இளஞ்சிங்கமாய் வளர்ந்து வருகிறான். இதனை அறிந்த கம்சன் இரு அரக்கர்களை ஏவி, கண்ணனைக் கொல்வதற்காக அனுப்புகிறார். ஒருவன் விளாம்பழமாகவும், மற்றவன் கன்றாகவும் வந்திருந்தனர். கண்ணன் தருணம் பார்த்து, கன்றை எடுத்து விளாம்பழத்தின் மேல் எறிந்தான். கன்றும் இறந்தது. விளாம்பழமும் விழுந்து சிதைந்தது. இவ்வாறு கன்றைக் கொண்டு விளாங்கனியை எறிந்த பெருமான், வரும் துன்பங்களை எல்லாம் அகற்றக்கூடிய கேசவனார் எழுந்தருளியிருக்கும் திருமணிமாடக் கோவிலைத் தேடிச் சென்று பணிவோமாக.



கருடனார் திருச்சேவை காண்கின்ற பதிஇதனை

விரும்பியே உகந்தமால் கன்றாலே விளவெறிந்தோன்

வருநோய்கள் அகற்றவென வந்தருளும் கேசவனார்

திருமணிமா டக்கோவில் தேடிவந்து தினம்பணிமின்.

3. நம் பெருமான், கண்களுக்கு நிறைந்த இன்பத்தைத் தருகின்ற செல்வன் கரிய மாணிக்க மலை போன்றவன். உள்ளம் நிறைந்த பேரன்பில் திளைத்து, உள்ளம் உருகுகின்ற தனது அடியார்களின் துன்பங்களைப்போக்கும்நாராயணன், இத்தலத்தில் புண்டரிகவல்லித் தாயாருடன் வீற்றிருக்கின்றான். அவனை வணங்குவோமாக.

கண்ணிறைந்த செல்வனாம் கரியமா ணிக்கமலை

உண்ணிறைந்த பேரன்பில் உளமுருகும் அடியாரை

நண்ணியவல் வினைபோக்கும் நாரணனார் அழகமைந்த

புண்டரிக வல்லியுடன் போந்திருந்தான் வணங்குமினே.

4. முடி மன்னர்களும் பணிகின்ற கண்ணபிரான் ஆனவன்,

தன் அடியைச் சார்ந்து நின்ற பாண்டவர்களின் உயிரைக் காப்பதற்காக, தேரோட்டியாக இருந்தருளியவன். அவன் இத்திருமாடக் கோவிலில் வீற்றிருக்கிறான். அவனைப் பணிவோமாக.

முடிசார்ந்த மன்னவரும் முன்பணியும் கண்ணபிரான்

அடிசார்ந்த பாண்டவர்தம் ஆவி யினைக் காத்தருளி

கொடிசார்ந்த தேரோடு குதிரைகளை நடத்தியவன்

படிசார்ந்த திருமாடக் கோவி லினைப் பணியுமினே.

5. செந்நெல் வயல் சூழ்ந்த திருமணிமாடக் கோவிலில் வீற்றிருக்கும் நாராயணன், தன்



திருப்பாதத்தைத் தாமரை மலரில் வைத்தபடி காட்சி தருகிறார். மகாபாரதத்தில் கர்ணன் மகிழத் தன் விசுவரூபத்தைக் காட்டியவன். அவனுடைய அடியைப் பணிந்தால் தனிப்பேறு பெற்றிடலாம்.

செந்நெல் வயல்சூழ்ந்த மணிமாடத் திருக்கோவில்

தன்னிலே உறைவான்நல் தாமரைப்பூஞ் சேவடியான்

கன்னன்தான் மகிழத்தன் பேருருவம் காட்டியவன்

தன்னடியைப் பணிமின்காள் தனிப்பேறு பெற்றிடவே.

மங்களாசாசனப் பாடல்

எந்நாளும் அணையா விளக்கே! அளவிட முடியாதவனே! நா நாராயணனாய் அவதரித்தவனே! கரிய பெரிய மேகம் போன்ற பெருமானே! எங்கள் வாழ் முதலே! எங்களுக்கே அருள்வாய் என்று அமரர்கள் பூவுலகில் வந்து நின்று வணங்கும் இடமான, அழகிய தேனீக்கள் எல்லாத் திசைகளிலும் தேவ காந்தாரி ராகம் பாட, களி வண்டுகள் பக்க ஆலாபனை செய்ய, மந்தார மரங்கள் நிழல் கொடுத்து நெருங்கி நின்று வாசனையை அள்ளி வீசும் திருநாங்கூரில் உள்ள மணிமாடக்கோவிலை, என் மனமே வணங்குவாயாக! எனத் தன் மனதை வணங்கச் சொல்லும் திருமங்கையாழ்வார் அருளிச் செய்த 12 பாசுரங்களில் முத்தாய்ப்பான முதல் பாசுரம் பின்வருமாறு

நந்தா விளக்கே! அளத்தற்கு அரியாய்!

நாநார ணனே! கருமா முகில்போல்

எந்தாய்! எமக்கே அருளாய் எனநின்று

இமையோர் பரவும் இடம் எத்திசையும்

காந்தாரம் அந்தேன் இசைபாட, மாடே

களிவண்டு மிழற்ற, நிழல் துதைந்து

மந்தாரம் நின்று மணமல்கும் நாங்கூர்

மணிமாடக் கோவில் வணங்கு என்மனனே!



# பெரியபுராணக் கதைக் களம்

பகுதி – 15

அன்பர்களே!

தொண்டர்தம் பெருமை அளவிடற்கு அரியது. அவர்களின் அருள் வரலாறு நம்மை நல்வழியில் நடத்தும். திருநெல்லையின் இவ்விதழில் புதுமை இணைப்பாகப் பெரியபுராணத்தில் இடம்பெற்றுள்ள அறுபத்து மூன்று அருந்தொண்டர் கதைகள் ஒவ்வொன்றாகக் காதுகளுக்கும், கண்களுக்கும் மனதிற்கும் இன்பம் சேர்க்கும் வகையில் கதைவடிவில் ஒளிபரப்பாகிறது. கேட்டு, உணர்ந்து அனுபவித்து மகிழுங்கள்.



மேலே காணும் பதிவின்
புற வழி இணைப்புக்கு
இங்கே சொடுக்கவும்



# தென் சபாநாயகர் கோயில் தரிசனம்

உ

## ஆனி - ஆடி மாத வழிபாட்டு நிகழ்ச்சிகள்

| | | | |
|---|---|---|---|
| 01.07.25 | மாலை | ஆனி திருமஞ்சன மகா அபிடேகம் | |
| 03.07.25 | வளர்பிறை அஷ்டமி | மாலை | வைரவர் வழிபாடு |
| 06.07.25 | வளர்பிறை ஏகாதசி | காலை | பெருமாள் வழிபாடு |
| 08.07.25 | பிரதோஷம் | | |
| 10.07.25 | பௌர்ணமி | மாலை | சிவகாமி அம்மன் வழிபாடு |
| 14.07.25 | சங்கடஹர சதுர்த்தி | மாலை | விநாயகர் வழிபாடு |
| 18.07.25 | தேய்பிறை அஷ்டமி | மாலை | வைரவர் வழிபாடு |
| 20.07.25 | கார்த்திகை | மாலை | ஸ்ரீ ஆறுமுகர் வழிபாடு |
| 22.07.25 | பிரதோஷம் | | |



# ஒலிப்பேழை

## கம்ப வாரிதியின் பக்கம்



திருநெல்லை இதழில் மாதந்தோறும் கம்பவாரிதி இலங்கை திரு ஜெயராஜ் அவர்களிடம் வினாக்களை எழுப்பி அவ்வினாக்களுக்கு விடையை அவர்களின் குரல் வழியாகப் பெற்று திருநெல்லையில் பதிவிடுகிறோம்.

கம்பவாரிதி ஐயா அவர்கள் தொடர் சுற்றுப்பயணத்தில் இருப்பதால், அவர்களால் கேள்வி பதில் அளிக்க இயலவில்லை, அவர்கள் கேள்வி பதில் அனுப்பியவுடன் அதை இந்த இதழில் பதிப்பிக்கிறோம்



# கோவிலூர் ஆண்டவர் நூலகம்

கோவிலூரில் அமைக்கப்பெற்றுள்ள ”கோவிலூர் ஆண்டவர் நூலகத்தில்” சுமார் 44,000 க்கும் மேற்பட்ட நூல்கள் உள்ளன. நூல் விவர அட்டவணையைப் பதிவிறக்கம் செய்ய இங்கு சொடுக்கவும்.



# கோவிலூர் ஆண்டவர் இணைய நூலகம்

INTERNET ARCHIVE WEB TEXTS VIDEO AUDIO SOFTWARE IMAGES SIGN UP | LOG IN UPLOAD Search

ABOUT BLOG PROJECTS HELP DONATE CONTACT JOBS VOLUNTEER PEOPLE

Koviloor Andavar Library

Member since 2016

(no description yet)

Share

Favorite

UPLOADS LOANS LISTS POSTS REVIEWS COLLECTIONS WEB ARCHIVES

6,831 Results

6,627 Results

Sort by: Weekly views Title Date archived Creator

Search uploads

சுப்பிரமணிய சுவாமி கீர்த்தனை archived May 29, 2025

ஸ்ரீ கணேச கீதை archived May 29, 2025

காரிகை மூலமும், விருத்தியுரையும் archived May 29, 2025

ஸ்ரீ விஷ்ணு ஸஹஸ்ரநாம ஸ்தோத்ரம் archived May 29, 2025

சதுரகராதி archived May 29, 2025

திருவண்ணாமலை ஸ்ரீ அபீதகுசாம்பாஸ... archived May 29, 2025

கோவிலூர் ஆண்டவர் நூலகத்தில் உள்ள நூல்கள் அனைத்தையும் கோவிலூர் ஆண்டவர் நூலகம் என்ற இணையதள நூலகத்தில் பதிவேற்றம் செய்து தமிழ்க் கொடையாக அளிக்க முடிவு செய்துள்ளோம்.

தற்போது சுமார் 7,057அரிய நூல்கள் இணைய நூலகத்தில் உள்ளன.

இப்போது நாள் ஒன்றுக்கு சுமார் 3000 பக்கங்களைப் புதிதாக இந்த நூலகத்தில் சேர்த்துக் கொண்டிருக்கிறோம். இந்த நூலகத்தில் உள்ள நூல்களை விலை இல்லாமல் படிக்கலாம்/ பதிவிறக்கம் செய்து கொள்ளலாம்.

இந்த நூலகத்தில் உள்ள நூல்களை விலை இல்லாமல் படிக்க / பதிவிறக்கம் செய்து கொள்ளலாம்.

கோவிலூர் ஆண்டவர் நூலகத்தில் உள்ள (பட்டியலில் காட்டப்பெற்றுள்ள) எந்த நூலாவது உங்களுக்குத் தேவை என்றால் நூலகப் பொறுப்பாளர் திருமதி.சோமசுந்தரி அவர்களைத் (தொலைபேசி எண் 9488124941 என்பதில்) தொடர்பு கொள்ளவும். அந்த நூல் பதிப்புரிமைக்கு அப்பால் இருக்கும் நிலையில் அதை நம் இணைய நூலகத்தில் சேர்த்திட ஆவன செய்கிறோம். தாங்களும் அந்த நூலை உங்கள் வீட்டில் இருந்து இணையவழியாகப் படிக்கலாம். நூல் இணையத்தில் சேர்த்தபின் உங்களுக்குத் தகவல் தெரிவிக்கப்படும். நீங்கள் அந்த நூலை இணைய நூலகத்தில் படித்துக் கொள்ளலாம் அல்லது பதிவிறக்கம் செய்து கொள்ளலாம். இதற்கு எந்தக் கட்டணமும் இல்லை

இணைய நூலகத்தைப் பயன்படுத்துவோம். இறை தத்துவங்களை அறிவோம்.

இப்போது போர்காலமாக இருப்பதால் அடிக்கடி நமது மின் நூலகம் இணைப்பு தடைப்பட்டு வருகிறது.

அவ்வாறு தடைப்பட்டு வரும் சூழலில் அதற்கு மாற்றாக தார் பிரவுசர் என்ற பிரவுசரை கொண்டு நமது நூலகத்தை நீங்கள் தொடர்பு கொள்ள முடியும். அதற்குரிய லிங்க் இத்துடன் இணைத்து இருக்கிறோம்

https://www.torproject.org/download/



# முந்தைய இதழ்களை படிக்க அந்தந்த லிங்கை கிளிக் செய்யவும்

திருநெல்லை – புரட்டாசி

திருநெல்லை – ஐப்பசி

திருநெல்லை – கார்த்திகை

திருநெல்லை – மார்கழி

திருநெல்லை – தை

திருநெல்லை – மாசி

திருநெல்லை – பங்குனி

திருநெல்லை – சித்திரை

திருநெல்லை – வைகாசி

திருநெல்லை – ஆனி

திருநெல்லை – ஆடி

திருநெல்லை – ஆவணி

திருநெல்லை – புரட்டாசி

திருநெல்லை – ஐப்பசி

திருநெல்லை– கார்த்திகை

திருநெல்லை– மார்கழி

திருநெல்லை– தை

திருநெல்லை– மாசி

திருநெல்லை– பங்குனி

திருநெல்லை– சித்திரை

